# கனவின் விளக்கம்

தொகுத்தோன்
பாண்டிச்சேரி
வா. கமாலுத்தீன் ஆலிம்

வெளியிடுவோர்:




முஸ்லிம் தெரு, M. சாவடி, தஞ்சாவூர்–613 001
தபால் பெட்டி எண்: 29 போன் : 04362 235529

# பொருளடக்கம்



# கனவின் தத்துவம்

## 1. கனவுகள் பற்றி அருள்மறை குர்ஆன்

"தவிர, "(நீர் கனவில் கண்ட) இவ்வாறே, உம் இறைவன் உம்மைத் தெரிந்தெடுத்து கனவுகளின் விளக்கங்களையும் உமக்குக் கற்றுக் கொடுத்து, உம்மீதும், யஃகூபின் (மற்ற) குடும்பத்தினர் மீதும் அவன் தன் அருளைப் பூர்த்தி செய்து வைப்பான்.

"இவ்வாறே, இதற்கு முன்னர் இப்றாஹீம், இஸ்ஹாக் ஆகிய உம்முடைய இரு மூதாதைகள் மீதும் (தன் அருளாகிய) அதனைப் பூர்த்தி செய்து வைத்தான். நிச்சயமாக உம் இறைவன் (யாவற்றையும்) நன்கறிந்தோனும், ஞானமுடை யோனுமாக இருக்கிறான்." (என்றும் கூறினார்) (திருக்குர்ஆன் அத்தியாயம்:12; வசனம்:6)

மேற்காணும் திருவசனங்களில் கூறப்பட்டுள்ள செய்திகள் யாவும் ஹல்ரத் யஃகூப் (அலை) அவர்கள், தம் அருமைத் திருமகனார் ஹல்ரத் யூஸுஃப் (அலை) அவர்களுக்குக் கூறியன வாகும்.

"பிற்காலத்தில், சிறப்பையும், கண்ணியத்தையும், பெருமை யையும் அறிவிக்கக்கூடிய கனவைக் காட்டுவதற்கு உம் உடன் பிறப்புக்களில் உம்மை இறைவன் தேர்ந்தெடுத்தது போன்று, இவற்றை விடவும் அதிகமாகத் தான் பெரும் பேறாகிய நபித் துவம் போன்ற உயர்பதவியினை அளித்திடவும் அல்லாஹ் உம்மைத் தேர்ந்தெடுப்பான்.

"ஆலமுல் மிஸால் என்னும் உவமையுலகில் கண்டிடும் கனவுகளுக்குரிய தத்துவங்களை ஆலமுஷ்ஷஹாதா என்னும்

*கனவின் விளக்கம்*

சாட்சிய நேரிய உலகில் கொண்டு அறிவிப்பான். மேலும் கனவு களுக்குப் பலன் சொல்லும் அறிவையும் கற்பித்து, ஹஸ்ரத் இப்றாஹீம், இஸ்ஹாக் அலைஹிஸ்ஸலாம் ஆகியவர்களுக்கு இதற்கு முன்னர் தன் அருட்கொடைகளைத் தந்து முழுமை செய்தது போன்று, உமக்கும் யஃகூபுடைய சந்ததியினருக்கும் அவன் தன் அருளை நிறைவு செய்வான்'' என்று ஹஸ்ரத் யஃகூப் (அலை) அவர்கள் தம் அருமை மைந்தருக்கு அறிவித் தார்கள்.

மேலும் வல்லோன் அல்லாஹ் கூறுகின்றான்:

''(முன்னர் அவர் கண்டது போன்ற) கனவுகளின் விளக்கங்களை அவருக்குக் கற்பிப்பதற்காகவும் இவ்வாறு நாம் அவருக்கு வசதி செய்தோம். அல்லாஹ், தன் கற்பனையை நிறைவேற்றுவதில் (யாவரையும்) மிகைத்தவனாக இருக்கிறான். ஆனால், மனிதர்களில் பெரும்பாலோர் (இதனை) அறிந்து கொள்ளமாட்டார்கள்.''

(அத்:12;வசனம்:21)

இவ்வசனத்தில் அல்லாஹ், தன் நேசராகிய ஹஸ்ரத் யூஸுஃப் (அலை) அவர்களுக்குக் கனவிற்குரிய தத்துவங்களை விளக்கிக் கூறிடும் அறிவைக் கற்றுக் கொடுத்ததைத் தெளி வாக்கியுள்ளான்.

## 2. கனவுகள் பற்றி அல்ஹதீஸ்கள்

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''மனிதர்களில் சிறந்தவன் பிற மனிதர்களுக்குப் பயன் அளிப்பவனேயாவான்.''

அண்ணலாரின் இக்கூற்றுக்கு ஏற்ப, மக்கள் கண்டிடும் நற் கனவுகள், தீய கனவுகள் குறித்து கனவுகள் பற்றிய அரிய நூற் களிலிருந்து பல்வேறு கனவுகளுக்குரிய விளக்கங்களை இந்நூலில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

கனவுகளில் உண்மைக் கனவுகள், பொய்க் கனவுகள், ஷைத்தானின் தூண்டுதலால் ஏற்படும் கனவுகள் குறித்தெல்லாம் பின்னர் விரிவாகக் கூறப்படும்.

*கனவின் விளக்கம்*

"எனக்குப் பின் நன்மாராயம் கூறுபவையே நபித்துவமாகும்" என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "நன் மாராயம் கூறுபவை என்றால் என்ன?" என்பதாக தோழர்கள் வினவினர். "நல்ல கனவுகள்" என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதிலிறுத்தார்கள்."

(அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி); ஆதார நூற்கள்: புகாரீ, முஅத்தா)

"உண்மையாக கனவு ஸஹர் நேரத்தில் காண்பதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்."

(அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி); திர்மிதி)

"மூன்று சந்திரன்கள் என் அறையில் விழுந்து கிடப்பதாகக் கனவு கண்டு இதனை என் தந்தை அபூபக்கர் (ரலி) அவர்களிடம் கூறினேன். அவர்கள் (எதுவும் கூறாது) வாய்மூடி இருந்து விட்டனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்து என் அறையில் அடக்கப்பட்டபின் என் தந்தையார் (என்னை நோக்கி) "உம்முடைய மூன்று சந்திரன்களில் இது ஒன்றாகும்; இதுவே அவற்றில் மிக மேலானதாகும்" என்று கூறினர்."

(அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி); முஅத்தா)

(பின்னர் அபூபக்கர் (ரலி) அவர்களும், உமர் (ரலி) அவர்களும் அவ்வறையிலேயே அடக்கம் செய்யப்பட்டனர். இவ்விதம் மூன்று சந்திரன்கள் பற்றிய கனவும் உண்மையாகியது.)

## 3. உண்மைக் கனவுகளும் பொய்க் கனவுகளும்

உண்மைக் கனவுகள் ஐந்து வகைகளாகும்:

1. தெளிவான, உண்மையான கனவு. இக்கனவு வானவரால் (மலக்கு) அறிவிக்கப்படாமல் அல்லாஹு தஆலா தானே அறிவிப்பதாகும்.

## *கனவின் விளக்கம்*

அதாவது, நபி (ஸல்) அவர்கள் மக்காவை வெற்றிக் கொள்வது போன்று அவர்கள் கண்ட கனவைப் போன்றாகும். அவர்கள் கனவு கண்டவாறே மக்கா வெற்றி நிகழ்ந்தது.

நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களை அறுத்து பலியிடுவதாகக் கண்ட கனவைப் போன்றாகும்.

2. மலக்குவானவர் அறிவிக்காமல் அல்லாஹ்வே நல்லவற்றைக் கொண்டு சுபசோபனம் (நன்மாராயம்) கூறுவது. தீயவற்றைக் கொண்டு எச்சரித்து அச்சமூட்டுவது. இவ்விரு கனவுகளும் அல்லாஹுத ஆலாவே அறிவிப்பதாகும்.

வல்லோன் அல்லாஹ்வை, நபிமார்களை, முஸ்லிமான தாய் தந்தையரைக் கனவில் காண்பதும் கூட இவ்வகையைச் சேர்ந்ததாகும்.

3. கனவிற்கு 'ஸித்தீகீன் அதாவது உண்மை உரைப்பாளர்' என்னும் பெயர் கொண்ட வானவர்களுக்கு அல்லாஹுத ஆலா 'உம்முல் கிதாப்' என்பதிலிருந்து அறிவித்துக் கொடுத்து ஒவ்வொரு பொருளுக்கும் உரிய விளக்கத்தை, இன்ன இன்ன முறையிலான நுணுக்கமான, உவமைகள் கொண்ட தத்துவத்தை ஏற்படுத்தி அறிவித்துக் கொடுத்துள்ளான்.

4. 'ரூஹி'ன் மூலம் வெளிப்படுத்திக் காட்டுவது, அது எவ்வாறென்றால் ஒரு மனிதனிடம், மலக்குகளில் ஒரு வானவர் அவனைப் பார்த்து, "உன் மனைவி, உன் நண்பனின் மூலம் உனக்கு நஞ்சூட்ட நாடியுள்ளாள்" என்று கூறுவது போல் கனவு கண்டால், அந்த நண்பன் கனவு கண்டவனின் மனைவியை 'ஜினா' (விபச்சாரம்) செய்கிறான் என்று விளக்கமாகும்.

5. அத்தாட்சிகளால் உண்மையாக்கப்பட்ட கனவுகளாகும். கண்ட கனவில் அத்தாட்சிகள் மிகுந்திருந்து, தீங்கானவற்றை நல்லவைகளாகவும், நல்லவற்றை தீங்கானதாகவும் ஆக்கப்படும்

அது எவ்வாறென்றால், பள்ளிவாசலில் தம்பூரா என்னும் கருவியை மீட்டுவது போலாகும். அவ்வாறு கனவு காண்பது,

## *கனவின் விளக்கம்*

**கனவு கண்டவன் தீயவற்றை விட்டும் அல்லாஹ்விடம் தவ்பாச் செய்து மீள வேண்டும்.**

**இவனின் பேரும் புகழும் எங்கும் பரவும். இது தீயதை, நலவாக்கி வைப்பதற்குரிய உதாரணமாகும்.**

**இனி, நல்லவற்றை, தீயதாக ஆக்கி வைப்பதற்குரிய உதாரணம் எதுவென்றால், குளிக்கும் அறையில் நிர்வாண நிலையில் குர்ஆன் ஓதுவதுபோல் கனவு காண்பதாகும். அல்லது நிர்வாண நிலையில் கூத்துக் கும்மாளம் போடுவது போன்ற கேளிக்கையான கனவு கண்டால், கண்டவன் தீயச் செயலில் ஈடுபடுவதை அறிவிக்கும்.**

### *பொய்க் கனவுகள் பற்றிய விளக்கம்:*

***இவை ஏழு வகைகளாகும்:***

**1. தன் மனமும் ஹிம்மத்தும் இச்சைகளும் ஆதரவு வைக்கக் கூடியதாகும். ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத விஷயங்களை கனவில் காண்பது.**

**2. குளிப்பைக் கடமையாக்கி வைத்திடும் கனவு.**

**3. ஷைத்தான் அச்சமூட்டுவது; விளையாடுவது போன்ற கனவுகள். இக்கனவுகள் எந்த இடரும் விளைவிக்காது.**

**4. ஷைத்தான் கனவில் வருத்தத்தை ஏற்படுத்தி வைப்பது போன்று மனிதர்கள், ஜின்களில் உள்ளவர்களில் சூனியம் செய்பவர்கள் கனவில் அறிவிப்பது.**

**5. ஷைத்தான் கனவில் அறிவிக்கும் பொய்யான செய்திகளைக் கனவென்பதாகக் கொள்ளக்கூடாது.**

**6. உடலிலுள்ள உறுப்புக்கள் ஏதோ நோயின் காரணமாகக் பாதிக்கப்பட்டு, அந்நிலையில் குழப்பமான அக்குணங் கொண்டவன் காணும் கனவுகள்.**

## *கனவின் விளக்கம்*

7. ஒருவன் இருபதாண்டுகளுக்கு முன் கண்ட ஒரு கனவை இப்பொழுது காண்பது போன்ற கனவுகள் யாவும் பொய்க் கனவுகள் ஆகும்.

எச்சரிக்கை: காலங்களில் குளிர்காலத்திலும், வெயில் காலத்திலும் காணும் கனவுகள் மிக்க பலவீனமான கனவுகளாகும்.

மழைக்காலத்திலும், வெயிலும் குளிருமில்லா நடுத்தரமான பருவ காலங்களிலும் காணப்படும் கனவுகள் மிக்க உண்மையானவையும், பழங்கள் குலுங்கிடும், காய்த்திடும் பருவ காலத்திலும் காணப்படும் கனவுகள் மிக்க பலவீனமானவைகளாகும்.

மாதங்களில் காணும் கனவுகள்:

மாதங்களில் ஸஃபர், ஷவ்வால் தவிர மற்றப் பத்து மாதங்களில் காணப்படும் கனவுகளில் மிகுதியானவை நல்லவை. கெட்டவை மிகவும் குறைவாகவேயிருக்கும். ஸஃபரிலும், ஷவ்வாலிலும் தீய கனவுகள் அதிகம் வரும். நற்கனவுகள் குறைவாகவே இருக்கும்.

நாட்களில் காணும் கனவுகள்:

புதன்கிழமையைத் தவிர, மற்ற நாட்களில் காணும் கனவுகள் யாவும் நல்லவையே!

நேரங்களில்:

பகலில் காணும் கனவு இரவில் காணும் கனவைவிடச் சிறந்தது. ஸஹர் நேரத்திலும், மதியத்திற்குச் சற்று முன் னேரத்திலும் காணும் கனவுகள் மிக்க உண்மையானவையாகும்.

தூங்கும் ஒழுங்குமுறை:

படுக்கச் செல்லும்பொழுது கிப்லாவை முன்னோக்கி வலப் பக்கம் சாய்ந்து படுக்க வேண்டும். அவ்வாறு படுத்துறங்

கும்போது காணும் கனவு அல்லாஹ்வின் புறத்தால் ஏற்படுவதால் அது உண்மையான கனவேயாகும்.

படுக்கைக்கு செல்லுமுன் உளுவுடனோ, தயம்மும் செய்து கொண்டோ படுத்துறங்கும்போது 'ரூஹ்' இபாதத் ஆன்மா வணக்கத்தில் ஈடுபடுவதால் அந்நிலையில் காணும் கனவுகளும் உண்மையானதாகும்.

இடப்பக்கமாகவோ, மல்லாந்து படுத்துத் தூங்கும் போதோ காணப்படும் கனவுகள் 'ரூஹி'ன் புறத்தால் ஏற்படுவதால் சில கனவுகள் சரியானதாகவும், சில கனவுகள் சரியானது ஆகாமலும் போய்விடும்.

குப்புறப்படுத்துத் தூங்கும் சமயம் காணும் கனவுகள் வீணானவையாகும்.

## 4. கனவு காணும் காலங்களின் விளக்கம்

இரவின் முன்னேரத்தில் கண்ட கனவு நனவாக இருபது ஆண்டுகள் கூட ஆகும். இரவின் முன்னேரத்தில் கால் பகுதி நேரம் போக முக்கால் பகுதி நேரத்தில் முற்பகுதியில் காணும் கனவுகள் பலித்திட பதினைந்து ஆண்டுகள் ஆகலாம். இரவின் அரைப் பகுதியில் கண்டிடும் கனவுகள் பலித்திட பத்தாண்டுகள் ஆகலாம்.

இரவில் முக்கால் பகுதி நேரம் கழிந்த பின் காணப்படும் கனவுகள் பலன் தர ஐந்தாண்டுகள் ஆகலாம். இக்கணக்கின்படி இரவின் முப்பது நாழிகையும், இருபது ஆண்டுகளுக்கு ஈவு நீக்கிப் பார்த்தால், ஓர் ஆண்டிற்கு ஒன்றரை நாழிகையானால் இரவின் கடைசி நேரம் ஒன்றரை நாழிகை இருக்கும் பொழுது கண்ட கனவு ஒரேயாண்டில் பலன் தரும்.

அடுத்து, சுபுஹு ஆனபின் (வைகறை நேரம்) அதன் ஆரம்பத்தில் கண்ட கனவு பலித்திட ஒரு மாதமாகும்.

பகல் குறைந்திட, குறைந்திட மாதமும் குறையும். பகல் முப்பது நாழிகையும், மாதம் முப்பது நாழிகையும் ஈவு கொண்டு

பார்த்தால், ஒரு நாளைக்கு ஒரு நாழிகையாகிறது. அதன்படி முக்கால் பகலின் துவக்கத்தில் கனவு கண்டால் முக்கால் மாதமும், அரைப் பகலின் துவக்கத்தில் கண்டால் அரை மாதத்திலும் (பதினைந்து நாட்களில்) முக்கால் பகல் சென்றபின் கண்டால் கால் மாதத்திலும் (ஏழரை நாட்களில்) முப்பதாம் நாழிகையில் காணும் கனவு ஒரு நாளிலும் பலிக்கும்.

அந்தந்த நாளிலும் முறைப்படி சரி பார்த்துக் கொள்ள வேண்டும். அந்த ஒழுங்கு முறைகளின்படி காணும் கனவுகள் உடனே பயன் தரும் என்பதை அறியவும்.

கிர்மானி (ரஹ்) கூறுகின்றார்கள்: மிகவும் சரியான கனவென்பது யாதொரு தங்கடமும் இன்றி நன்றாகத் தூங்கிடும் பொழுது காணப்படும் கனவுதான்.

அலீ (ரலி) அவர்கள், "ஒரு மனிதன் ஒரு பொருளைக் கனவில் கண்டால் அது சில சமயம் பயன் அளிக்கிறது; சிலபொழுது பலிக்காமலும் போவதுண்டு. எவ்வாறெனில், ஸையியிதினா உமர் (ரலி) அவர்கள் கூறுவது போன்று, அவர்கள் கூறினார்கள்:

"ஒருவன் தூங்கும்பொழுது அவனுடைய 'ரூஹ்' வானத்தளவில் உயர்த்தப்படுகிறது. அந்த ரூஹ் வானத்தளவில் சேர்வதற்கு முன்னர் காணும் கனவு பலிக்காது; வானத்தளவில் சேர்ந்தபின் அது பலிக்கும்."

## 5. கனவு காண்போர் கவனத்திற்கு

கனவு கண்டவன் விளக்கம் கேட்கும் முறை யாதெனின், கண்ட கனவு பயங்கரமானதாகவோ, திடுக்கத்தை ஏற்படுத்தியது போன்றோ, அமளி துமளிகள் ஏற்பட்டது போன்றோ, ஷைத்தானின் தூண்டுதலால் ஏற்பட்டு குளிக்கும் கடமையை ஏற்படுத்திய நிலையிலோ இருந்திடுமாயின், கனவு கண்ட உடனே எழுந்து,

இடப்பக்கம் திரும்பி, "அஊதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்" என்று மூன்று முறை கூறி எச்சில் துப்பிவிட்டு,

வலப்பக்கமாகப் படுத்துக் கொள்ள வேண்டும். மேற்கண்ட கெட்ட கனவை எவரிடத்திலும் கூறாமல் மறைத்து விட வேண்டும்.

அவ்வாறு கனவை வெளிப்படுத்தினால் அவன் குழப்பம், சதிமானம் போன்றவற்றில் சிக்கிக் கொள்வான்.

அவ்வாறின்றி, பாவத்தை விட்டும் விலகுவது, எச்சரிக்கை உணர்வு பெறும் பொருட்டும், அழிவை ஏற்படுத்தும் செயல்களை விட்டும் விரட்டுவது போன்ற ஷைத்தானின் புறத்தால் ஏற்படாத கனவுகளைப் பிறரிடம் கூறி விளக்கம் கேட்கலாம்.

மேற்கண்ட கனவுகளையும், பிற கனவுகளையும் கனவின் விளக்கம் நன்கறிந்த ஆலிம்களிடமோ, தனக்கு நல்லுபதேசம் செய்யக் கூடியவர்களிடமோ, அறிவு உடையவர்களிடம் மட்டுமே கண்ட கனவைக் கூறி விளக்கம் கேட்க வேண்டுமேயன்றி கனவின் விளக்கம் அறியாதவனிடம், பகைவனிடம் பொறாமைக்காரனிடம், கெடுமதி கொண்டவனிடமெல்லாம் சொல்லக் கூடாது.

மேலும், பருவம் எய்தாதவன், பெண்களிடமும் கூறக் கூடாது. அப்படிச் சொன்னால் கனவு சொல்லக் கேட்டவன் எவ் வாறு கூறினானோ அப்படியே ஆகிப்போகும் என்றும் மிகுதி யானவர்கள் இவனுக்கு அவர்கள் பகைவர்களாயும், அறியாத முட்டாள்களாயும் இருப்பதால் கண்டவர்களிடம் எல்லாம் கனவு பற்றிச் சொல்லக் கூடாது.

மேலும், காணாததைக் கண்டதாகச் சொல்வதும் கூடாது. அப்படிச் சொன்னால் அல்லாஹ்வின் 'லஃனத் சாபம்' உண் டாகும். அதுவுமன்றி மறுமை நாளில் வேதனையும் செய்யப் படுவான்.

இவ்வுலகிலும் பொய் சொன்னவனுக்கு அதன் தீங்குப் பிடித்து விடும். எல்லா நிலைகளிலும் உண்மையுடன் இருப்ப வனின் கனவுதான் உண்மையானதாக இருக்கும்.

தான் மட்டும் பொய் சொல்லுபவனாகயிருந்து பிறரிடம் உண்மைப் பேசுபவனாக இருப்பவனின் கனவுகள் சில பொய்

யாகவும், சில உண்மையாகவும் இருக்கும்.

தானும் பொய்யனாக இருப்பதுடன் பிறரிடமும் பொய் சொல்லும் மனிதனாக இருந்து வருபவனின் கனவுகள் அனைத்தும் பொய்யேயாகும்.

காஃபிர், முனாஃபிக் என்னும் நயவஞ்சகன், பாஸிக் என்னும் பெரும் பாவிகள், பொய் பேசும் குழந்தைகள் ஆகி யோரின் கனவுகள் சிலபொழுது சரியானதாகவுமிருக்கும். பொய் பேசாத குழந்தைகளின் கனவுகள் சரியானதேயாகும்.

மய்யித்தும், மிருகங்களும் கனவில் பேசுவதாகக் கண்டால் அக்கனவு உண்மையே ஆகும். கல் போன்றன பேசக் கண் டாலும் உண்மையான கனவுதான்.

எச்சரிக்கை: தனக்கு முற்றிலும் தகுதியற்ற நற்கனவு அல் லது தீய கனவுகள் கண்டால் அல்லது அதுபோன்று கனவு கண்டவனைக் காண நேர்ந்தால், கண்டவன் அல்லது காணப் பட்டவனின் உறவினர்களில் அவன் போன்றவர்களில் அது அதற்குத் தகுதியானவர்களுக்கு உண்டாகும் கனவின் விளக்கம் கூறப்பட வேண்டும்.

எவ்வாறென்றால், அபுல் ஈஸ் உடைய மகன் இணை வைத்த நிலையில் இறந்தபின் அவனை சுவர்க்கத்தில் இருப்பது போன்று நபி (ஸல்) அவர்கள் கனவு கண்டு, இதாபுப்னு உஸைத் (ரலி) அவர்கள் அவனைப் போன்றிருந்த காரணத்தால், சுவர்க்கத்தில் இதாபுப்னு உஸைத் (ரலி)வைக் கண்டதாகக் கூறினார்கள். இதைப் போன்றே மற்றவற்றையும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

கனவிற்கு விளக்கம் சொல்லக் கூடியவர் குர்ஆன் ஹதீஸ் களையும், அந்தந்த மொழிகளிலுள்ள கவிதை, உவமானம், பாடல் கள் முதலியவற்றின் உட்பொருளைத் தெளிவாக அறிந்தவராக இருக்க வேண்டும்.

காலம், நேரம் முதலியவை மாறுதல் அடைவதைப் புரிந்து அது அதற்குத் தகுந்தவாறு விளக்கம் அளித்தலையும், மனிதர்

களிடையேயுள்ள உயர்வுகள், தகுதிகள் முதலியவற்றையும் அறிந்தவராயும் இருந்திட வேண்டும்.

## குர்ஆனைக் கொண்டு விளக்கம் அளித்தல்:

அல்லாஹ் திருக்குர்ஆனில், "நூஹையும், அவருடன் கப்பலில் ஏறியவர்களையும் நாம் ஈடேற்றமாக்கி வைத்தோம்" என்று கூறியுள்ளான். ஒருவன் கப்பல், தோணி போன்றவற்றில் ஏறியதாகக் கனவு கண்டால் அதன் விளக்கம், கனவு கண்டவன் ஈடேற்றம் பெறுவான் என்று பொருள்படும்.

குர்ஆனில் பெண்களை முட்டைக்கு உவமையாக கூறியுள்ளதால், கனவில் ஒருவன் முட்டையைக் கண்டதாகக் கூறினால் கண்டவனுக்குப் பெண் கிடைப்பாள் என்று விளக்கம் சொல்லப்படும்.

மனிதனின் 'கல்பை' கல் போன்றது எனவும், மீனைப் பற்றிப் பலவகையான விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. எனவே, குர்ஆனில் எந்தெந்த பொருள் குறித்துக் கூறப்பட்டுள்ளனவோ, அது அதற்குத் தக்கவாறு உதாரணங்கள் கூறப்பட வேண்டும்.

## ஹதீஸ்களைக் கொண்டு விளக்கம் அளித்தல்:

ஹதீஸ்களில் எந்தெந்தப் பொருள்களை எது எதற்கு உதாரணம் காட்டப்பட்டுள்ளனவோ, அந்தந்தப் பொருளை வைத்துக் கனவு கண்டவனுக்கு விளக்கம் கூற வேண்டும்.

எவ்வாறென்றால், ஹதீஸில் காகத்தை பாஸிக் என்னும் பெரும் பாவிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

ஒருவன் தன் கனவில் காகத்தைக் கண்டதாகக் கூறினால் கண்டவன் பெரும் பாவியாவான் என்று விளக்கம் கூற வேண்டும். மேலும் எலியையும் பாஸிக் என்றே ஹதீஸில் கூறப்பட்டுள்ளதால், கனவில் எலியைக் கண்டதாக ஒருவன் கூறினால், கண்டவன் பாஸிக் என்றே விளக்கம் கூறவேண்டும்.

## பொய் சொல்லாதே:

அறிந்து கொள்! கனவு பற்றி பொய் சொல்லுவது கனவை வீணாக்கிவிடும். கனவின் அசலை விட்டும் மாற்றிவிடும்.

நபி (ஸல்) அவர்கள் கனவில் காணாதவற்றைக் கண்ட தாகப் பொய் சொல்பவனை மிகவும் கடிந்து கூறியுள்ளனர்.

"எவன் என்மீது வேண்டுமென்றே பொய் கூறுவானோ அவன் ஒதுங்குமிடத்தை நரகத்தில் ஆக்கிக் கொள்ளட்டும்" என்னும் கருத்தில் வன்மையாகக் கூறியுள்ளனர். நபி (ஸல்) அவர்களைக் கனவில் காணாத நிலையில் அவர்களைக் கண்டதாகக் கூறுவது மாபெரும் குற்றமாகும்.

"எவனொருவன் நபியின் மீதோ, தன் தாய் தந்தையர் அல்லது அவனுக்கு மிக உவப்பானவர் மீதோ பொய் கூறு வானாயின் சுவர்க்கத்தின் வாடையைக் கூட அவன் நுகர்ந்திட மாட்டான்" என்ற கருத்தில் நபி (ஸல்) அவர்கள் கண்டித்துக் கூறியுள்ளனர்.

நாளை மறுமையில் மூன்று மனிதர்களை மிகக் கடின வேதனை செய்யப்படும். அவர்கள்:

1. ஒருவன் தான் கண்ட கனவில் பொய் சொன்னவன். இவனிடம் இரண்டு கோதுமை தானியத்தைக் கொடுக்கப்பட்டு, அவ்விரண்டையும் இணைக்குமாறு கூறப்படும். அவன் அவ்விரண்டையும் இணைத்து முடித்துப் போடும்வரை அவனை வேதனைச் செய்யப்படும். ஆனால் அவனால் அவ்விரண்டையும் இணைத்திட முடியாது.

2. உருவம் அமைப்பவன்: அதாவது சிலை செய்தவன். இவனை நாளை மறுமையில் இவ்வுலகில் அவன் உருவாக்கிய சிலைகளுக்கு (புகைப்படங்களுக்கு) உயிரூட்டுமாறு கூறப்படும். அவன் அந்தச் சிலைகளுக்கு உயிர் கொடுக்கும் வரையும் வேத னையளிக்கப் பெறுவான். அவனால் அவற்றுக்கு உயிர் கொடுக் கவே முடியாது.

3. மக்கள் வெறுத்திடும் நிலை பெற்ற ஒருவன் அம் மக்களுக்கு இமாமத் செய்தவன்.

இம்மூவகையினரும் இறை தண்டனைக்குட்பட்டோர்களாவர்.

எனவே, அல்லாஹ் நம் அனைவருக்கும் கனவில் கண்ட உண்மைகளின்படி விளக்கம் கூறிடவும், கேட்டிடவும் அருள் பாலிப்பானாக! ஆமீன்! யாரப்பல் ஆலமீன்!

## 6. அல்லாஹ்வைக் கனவில் காணுதல்

ஒருவன் அல்லாஹ்வை அவனுக்குரிய உயர் தகுதிகளுடனும், தனிச் சிறப்புகளுடன் அவனுக்கு நிகராக எவரையும் எதனையும் ஒப்பு உவமைகளின்றியும், எவ்வித மாற்றமும் இல்லாமலும் கனவில் கண்டானாயின், கண்டவன் இவ்வுலகில் நன்மாரானம் பெற்றுக் கொள்வதுடன், மறுமையில் தன்னுடைய மார்க்கத்தில் ஸலாமத்தையும் பெற்றுக் கொள்வான்.

ஏனென்றால் அல்லாஹ், "அவனைப் போன்று எப்பொருளும் இல்லை." என்று கூறியுள்ளான். ஆம்! அவனுக்கு நிகராகவும், ஒப்பாகவும் உதாரணம் கூறிட முடியாத அளவிலும் அவன் உள்ளான். அந்த அல்லாஹ்வை அவனுக்குரிய உயர் நிலையில் காண முடியும், அவனுக்குத் தகுதியற்ற நிலையில் அவனைக் கனவில் காண்பது கண்டவனுக்கு நன்மை பயக்காது.

அடுத்து, அல்லாஹ்வை ஒப்பு உவமைகளுடன், இன்ன விதமாக அவன் இருந்தான் என்று ஒருவன் கனவில் கண்டானாயின் கண்டவன் உள்ளம் கெட்டுவிட்டது என்பது பொருள்.

அடுத்து கனவு கண்டவனிடம் அல்லாஹ் பேசியதாக இருந்திடுமாயின், அவன் மிகவும் கெட்ட உள்ளம் கொண்டவன் ஆவான்.

...............................

................

..........

## கனவின் விளக்கம்

| கனவு | பலன் |
|---|---|
| 1. நோயாளி கண்டால் | மரணமாவான் |
| 2. வழிகெட்டவன் கண்டால் | நேர்வழி பெறுவான் |
| 3. அநீதி இழைக்கப்பட்டவன் கண்டால் | உதவி பெறுவான் |
| 4. அல்லாஹ்வைக் கனவில் காணாமல் அவனின் பேச்சை மட்டும் கேட்டால் | கனவில் பேச்சைக் கேட்டவனின் பதவி உயரும். கண்டவர் வஹீ அறிவிக்கப்பட்டவராயிருப்பாராயின் மிக்க மேலானதாகும். |
| 5. கனவில் கண்டவன் ஒரு திரைக்குப் பின்னால் இருந்தவாறு பேச்சைக் கேட்டால் | கண்டவன் சில பொழுது வழிகேட்டின் மீதும், பித்அத்திலும் இருப்பான்; சில பொழுது அவன் கனவில் கண்ட அளவின் படி பதவிகளைப் பெற்றுக் கொள்வான். |
| 6. அல்லாஹ்வை ஒரு வடிவத்தில் கண்டால் | அக்கனவிற்குப் பலன் இல்லை. |
| 7. அல்லாஹ் ஓரிடத்தில் உருவம் கொண்டவனாக இருப்பதாகக் கண்டால் | அவ்வாறு கண்டவன் அல்லாஹ்வின் மீது பொய் கூறியவன் ஆவான். அல்லாஹ்வுக்குத் தகுதியற்றதை அவனளவில் சேர்ப்பவன் ஆவான். |
| 8. ஒருவர் அல்லாஹ்வைக் காணும் தகுதி பெற்று அவனிடம் பேசும் சக்தியும் பெற்றுக கொள்வாராயின் அந்நிலையில் அவனைக் கண்டால் | அத்தகைய தகுதி பெற்றவருக்கு அல்லாஹ் தன் அருளையும், அருட்கொடைகளையும் நிரப்பமாகக் கொடுப்பான். இவ்வுலகில் அல்லாஹ்வை உண்மையிலேயே கனவில் கண்டவருக்கு அல்லாஹ் மறுமையிலும் காட்சி தருவான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 9. ஒருவன் தன் கனவில் அல்லாஹ் தன்னை நெருங்கி வருவதாகவோ, தன்னுடன் சேர்ந்துத் தொழுவதாகவோ கண்டால் | கண்டவன் அல்லாஹ்வின் அருளைப் பெற்று வெற்றி கொள்வதுடன், அவன் இறைவழியில் மரணத்தை விரும்பியவனாக இருப்பின் அவ்வாறே மரணமாவதுடன், இவ்வுலகிலும்மறுவுலகிலும் தான் எண்ணங் கொண்டதையும் பெற்றுக் கொள்வான். |
| 10. அல்லாஹ் தன் கழுத்தைக் கையால் இணைத்துக் கொள்ள, இவன் அல்லாஹ்வின் உதடுகளில் முத்தமிடுவதாய் கண்டால் | கண்டவன் தான் தேடிய நற்கூலிகளையும், இவன் அமல்களின் நற்கூலிகளையும், அவனின் விருப்பங்களையும் கிடைக்கப் பெறுவான். |
| 11. உலகத்தில் உள்ள பொருளில் எதையும் அல்லாஹ் தனக்குக் கொடுப்பதாகக் காண்பானாயின் | கொடுக்கப் பெற்றவனுக்கு பலாயும் நோயும் பீடிக்கும். அதன் மூலம் இவனுக்கு நற்கூலியும், திக்ரும் இரட்டிப்பாகும். |
| 12. அல்லாஹ் ஒருவனின் கனவில் தன்னுடைய பாவங்களை மன்னித்து விடுவதாகவோ, சுவர்க்கத்தில் நுழைவிப்பதாகவோ அல்லது இவை போன்றவற்றைக் கொண்டு நன்மாராயம் கூறுவதாகக் கண்டானாயின் | இவன் தன்னை அல்லாஹ்வின்பால் நோக்கியிருப்பதை என்றும் நீங்காதவனாகவும், அவனை எந்நிலையிலும் அஞ்சிலவனாயும் இருப்பவன் என்பதனால் அல்லாஹ் அவன் கனவில் கண்டவாறு தன் வாக்குறுதியை நிறைவேற்றுவான். |
| 13. அல்லாஹ்வின் 'அர்ஷை' 'குர்ஸி'யை மட்டுமே கண்டால் | கண்டவன் தனக்குரிய கைரானதை (நல்லவற்றை) முற்படுத்தி வைப்பான். |
| 14. அல்லாஹ்வை கனவில் கண்டும் பேசவும் சக்தி பெற்றால் அல்லது அல்லாஹ்வை அர்ஷில் குர்ஸியில் இருப்பது போல் கண்டால் | அவ்வாறு கண்டவன் நலவையும், நிறைந்த அறிவையும் பெற்றுக் கொள்வான். |

*கனவின் விளக்கம்*

| | |
|---|---|
| 15. ஒருவனை அல்லாஹ் தேடிடும் நிலையில் இவன் அல்லாஹ்வைக் கண்டு விரண் டோடினால் | அவ்வாறு கண்டவன் ஆபிதாக யிருந்தால் வணக்கத்தை விட்டு விடுவான். இவனுக்குப் பெற் றோர் இருந்தால் அவர்களை நோவினைச் செய்வான். கண்ட வன் அடிமையாக இருந்தால் அவன் தன் எஜமானுக்கு மாறு செய்வான். |
| 16. தனக்கும் அல்லாஹ் வுக்கும் இடையில் திரையிருப் பதாகக் கண்டால் | கண்டவன் பாவம் செய்வான். |
| 17. ஒருவன் அல்லாஹ்வைக் கோபமுற்றிருப்பதாகவோ, கடு கடுப்பாக இருப்பது போன்றோ அல்லது தன் ஒளியைச் சுமக்க இயலாதவனாகவோ, இவன் அல்லாஹ்வைக் கண்டு அஞ்சுவதாகவோ, திடுக்கம் உற்றதாகவோ கண்டானாயின் | இவை யாவும் பாவச் செயல் களிலும், பித்அத்தான செயல் களிலும் அவன் இருப்பதை அறிவிக்கும். |
| 18. தவ்பாச் செய்து பிழை பொறுக்கத் தேடுவதாகக் கேட் பது போன்று கண்டானாயின் | ” ” ” |
| 19. ஒருவன் அல்லாஹ்விடம் ஏதோ ஒரு விஷயத்தை அறி விப்பது போல் காண் பானாயின் | கண்டவன் குர்ஆனை மிகுதி யாக ஓதி வருவான். அல்லாஹ் இவனுக்கு ஒரு செய்தியைச் சொல்லி அதனை இவன் விளங் கிக் கொண்டால், ஆட்சியாள னோ, அதிகாரியோ கூறிடும் செய்திகளை இவன் விளங்கிக் கொள்வான். அல்லாஹ் அறிவித் தது இவனுக்கு விளங்காமற் போய் விட்டால் ஆட்சியாளரின், அதிகாரியின் பேச்சுக்களையும் |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| | இவனால் விளங்கிக் கொள்ள முடியாது. |
| 20. ஒருவன் அல்லாஹ்வை, தாய் தந்தையர், உடன் பிறப்புகள், உற்றார் உறவினர்கள், தனக்கு மிக நெருக்கமானவர்களின் வடிவத்தில் காண்பானாயின் | அல்லாஹ் இவன் மீது அருளும் பரக்கத்தும் செய்தருள்வான். இவனின் நற்கூலி வலிமைப் பெறுவதற்காக இவனின் உடலில் பலாய் முஸீபத்துகள் பீடிக்கும். |
| 21. ஒருவன் அல்லாஹ் கோபம் இல்லாமல் ஓர் இடத்தில் வருவது போல் கண்டால் | அந்த இடத்தில் நன்மைகள் அதிகமாகும். |
| 22. கோபத்துடனோ இருளாகவோ ஓரிடத்தில் வருவதாகக் கண்டால் | அந்த இடம் பாழடைந்து அவ்விடத்தில் உள்ளவர்கள் அழிந்து போவார்கள். அவ்விடத்தில் வேதனைகள் இறங்கிடும். |
| 23. ஒருவன் அல்லாஹ்வை ஏசுவதாகக் கண்டால் | அல்லாஹ் இம்மனிதனுக்குக் கொடுத்திருந்த நிஃமத்துகளுக்கு மாற்றம் செய்து விட்டான். அதனால் அல்லாஹ் இவனுக்கு ஏற்படுத்தி வைத்திருந்த 'ரிஸ்குகளுக்குரிய பங்கை அவன் இழந்து விடுவான். |
| 24. ஒருவன் அல்லாஹ்வின் முன்னிலையில் அமர்ந்து, அல்லாஹ்வைப் பார்த்து, அவனுடன் பேசுவதாகக் கண்டால் | கனவு கண்ட மனிதர் நல்லடியாராக இருந்தால், கண்டவருக்கு அக்கனவு மிக்க நல்லதாகும். அவ்வாறில்லையாயின் கனவு கண்டவர் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளவும். |

### கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 25. அல்லாஹ் ஆடையணிந்திருப்பதாகக் கண்டால் | கண்டவனை கவலைகள் ஆட் கொள்ளும். |
| 26. அல்லாஹ் தன் பெயர்களில் ஒன்றையோ வேறொரு பெயரையோ தனக்குச் சூட்டுவதாகக் கனவு கண்டால் | அவ்வாறு கண்டவனின் செயல்கள் மேன்மையுறும். இவன் தன் பகைவனையும் வென்று விடுவான். |
| 27. அல்லாஹ் கோபமாக இருப்பதாகக் கண்டால் | இவனின் பெற்றோர் இவனின் மீது கோபமுற்றிருப்பபதைக் குறிக்கும். |
| 28. தாய் தந்தையர் கோபம் கொண்டிருப்பதாகக் கண்டால் | இவன் மீது அல்லாஹ் கோபமுற்றிருப்பதைக் குறிக்கும். |
| 29. ஒருவன் தன் கனவில் அல்லாஹ் கோபங் கொண்டிருப்பதாகக் கண்டால் | கனவு கண்டவன் உயர்ந்த இடத்திலிருந்து விழுவான். |
| 30. உயர்ந்த மலை, சுவர், வானம் போன்றவற்றிலிருந்து விழக் கண்டால் | அல்லாஹ் இவனின் மீது கோபங் கொண்டுள்ளான் என்பதைக் குறிக்கும். |
| 31. ஓர் உருவத்தை அல்லாஹ் என்பதாக ஒருவனுக்குக் கூறப்பட்டு கேட்பவன் அதற்கு ஸஜ்தா செய்வது போல் கண்டால் | பொய்யை உண்மை என்று எண்ணி அதில் சிக்கிக் கொள்ளும் நிலை அவனுக்கு ஏற்படும். |
| 32. இவன் தன்னையே 'ஹக்'காகக் கண்டால் | கண்டவன் நேர்வழி பெற்றுக் கொள்வான். |

## 7. அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் காணுதல்

''நபி (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்: ''ஒருவன் என்னைக் கனவில் காண்பானாயின், என்னை அவன் விழித் நிலையில் கண்டவன் போலாவான். ஷைத்தான் என் உருவில் வரமாட்டான்.''

இன்னும் ஓர் அறிவிப்பில், ''என்னைக் கனவில் கண்டவன் உண்மையில் என்னையே கண்டான். மேலும் என்னைக் கனவில் கண்டவன் நரகம் புகமாட்டான்'' என்று கூறப்பட்டுள்ளது. ஹதீஸ் களின் பொருள் குறித்து உலமாக்களிடையே கருத்து வேறுபாடு கள் உள்ளன.

இப்னு சிரீன் (ரஹ்) போன்றவர்கள் கூறுகின்றார்கள்: நபி (ஸல்) அவர்களை, அவர்கள் உயிர் வாழ்ந்த பொழுது எந்த நிலையில் இறந்து போனார்களோ அவர்களை அவ்வடிவத்தில் கண்டதுதான் சரியானதாகும். அவ்வாறு காணாதிருப்பது சரியல்ல என்பதாகப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

சரியான சொல் எதுவென்றால் நபி (ஸல்) அவர்களை எந்நிலையில் கண்டாலும் பொய்யல்ல. அது அவர்களின் உண்மையான தோற்றமேயாகும்.

அவர்களைப் பற்றிய சீரிய பண்புகளின் தோற்றத்தில் கன வில் காணப்பட்டாலும் சரி அல்லது அதற்கு மாற்றமான தோற் றத்தில் அவர்களைக் காணப்பட்டாலும் சரியே சிறிதும் சந்தேகத்திற்கு இடமின்றி அது அவர்களேயாவர்.

நபி (ஸல்) அவர்களின் இளமைப் பருவம் முதுமைப் பருவம் இவ்விரண்டிலும் அவர்களின் தோற்றம் எவ்வா றிருந்தனவோ, அதே நிலையில் கண்ட கனவுகளுக்குப் பலன்கள் பார்க்க வேண்டியதில்லை.

அத்தோற்றங்களுக்கு மாற்றமாகக் கனவுகள் எற்படின் பலன்கள் பார்க்க வேண்டும்.

## கனவின் விளக்கம்

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தெளிவான கண்ணாடி போன்றிருப்பவர்கள். அவர்களை ஒருவர் எவ்வகையில் கண் டாலும் சரியே. நல்ல நிலையிலோ கெட்ட நிலையிலோ எவ் வகையில் இருந்திடினும் சரியே! கண்டவனின் நிலைகள் நல்ல வைகளாகவோ கெட்டவைகளாகவோ இருப்பதைத்தான் கனவின் பலன்கள் அறிவிக்கும். கண்ட கனவில் அண்ணலாரின் உயர் நிலை நல்லதாக இருந்தால் நல்லதென்றோ, அவர்களின் உயர் நிலைக் கெட்டதாகத் தோற்றமளிப்பதால் கெட்டதென்றோ பொருளல்ல.

அதற்கு மாற்றமாகக் கனவு கண்டவனைத்தான் அது குறிக்கும். அவர்களின் சிறப்பிற்குரிய தரத்தின் நிலையினை எத்தகைய நபியோ, மலக்குகளோ, அவ்லியாக்களோ எவர் களாலும் அடைய முடியாத முழுமைப் பெற்ற ஹகீகத்தும், அழ கும் கொண்டிலங்கும் அது ஓர் உயர்ந்த தரத்தாக விளங்கிக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு இப்னு அபீஜம்ரா (ரஹ்) மூலம் ஹஜருல் ஹைத்தமீ (ரஹ்) அவர்கள் "ஷரஹுஷமாயிலுத் திர்மிதீ" என்னும் கிதாபில் எழுதியுள்ளார்கள்.

ஷைத்தான் அல்லாஹ்வின் தோற்றத்திலோ, அவனின் அத் தாட்சிகளைக் கொண்டும், நபிமார்களைப் போன்றும், வானவர் களின் கோலத்திலும் உருக்கொண்டு வரமுடியாது. எனவே, எவ ரேனும் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டால் கண்ட வனின் நிலை இலேசானதாக இருக்கும்.

கனவு கண்டவன் துக்கத்தில் இருந்தால் மகிழ்ச்சி கொள்வான்.

கனவு கண்டவன் சிறைச்சாலையில் அடைபட்டிருந்தால் விடுதலை பெறுவான்.

## கனவின் விளக்கம்

| கனவு | பலன் |
|---|---|
| 33. நபி (ஸல்) அவர்களைப் பஞ்சம் சூழ்ந்த இடத்திலோ அல்லது சரக்குகளின் விலைகள் அதிகமாக ஏறி விட்ட இடத்திலோ கண்டால் | அண்ணலார் (ஸல்) அவர்களின் மூலம் பஞ்சம் நீங்கி, விலைகளும் இறங்கி விடும். அந்த இடத்திலுள்ளவர்கள் அநீதி இழைக்கப்பட்டவர்களாயிருந்தால், உதவி கிடைக்கப் பெறுவார்கள். அச்சத்தால் அவதிப்படுவார்களாயின் அவர்கள் அச்சம் நீங்கப் பெறுவார்கள். |
| 34. நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதனின் கனவில் தோன்றிய நிலையில் அல்லது இவனுக்கு எதையேனும் கற்றுக் கொடுப்பதாகக் கண்டால் | கனவு கண்ட மனிதன் ஆட்சி செய்திடும் தகுதி பெற்றவனாயிருந்தால் ஆளும் பொறுப்பை ஏற்பான். தன் காலத்து மக்களுக்கு நீதி நெறி புகட்டுவதற்குத் தகுதி பெற்றவனாயிருப்பின், நல்லவற்றை ஏவி தீயவற்றைத் தடுப்பான். |
| 35. அல்லது தொழுகையில் இமாமத்துச் செய்வதாக, வழிகாட்டிச் செல்வதாக, ஓர் அழகிய பொருளை உண்பதற்குக் கொடுப்பதாக, ஓர் அழகிய ஆடையை அணிவிப்பதாக, வாழ்த்துக் கூறுவதாக அல்லது நலவு கொண்டு துஆக் கேட்பதாகக் காண்பானாயின் | கண்டது ஆலிமாகயிருப்பின், தாம் அறிந்ததைக் கொண்டு அமல் செய்வார். வணக்கவாளியாக இருப்பாராயின் 'கராமாத்து'கள் உள்ளவர்களுடன் சேருவார். பாவியாக இருந்தால் தவ்பாச் செய்து அல்லாஹ்வின் பால் மீளுவான். கண்டவர் காஃபிராயிருப்பின் நேர்வழி பெறுவார். சிலபொழுது ஓதுவது, படிப்பது கொண்டு தம் அந்தரங்கம் தூய்மைப் பெற வேண்டியவற்றுக்குரிய பயனைத் தம் எண்ணப்படிப் பெற்றுக் கொள்வார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 36. கண்டவன் பயந்தவனாயிருந்தால் | அச்சம் தீர்ந்துவிடும். நபி (ஸல்) அவர்களைக் கண்டவனுக்கு நன்மாராயமும், வாக்குறுதி மாறாத தன்மையும், ஹஜ்ஜை நிறைவேற்றும் நிலையும் ஏற்படும். |
| 37. நபி (ஸல்) அவர்களை ஒரு பித்அத்தீகாரன் கண்டால் | வழிகேட்டில் இருப்பவனும், பித்அத்துச் செய்பவனும் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டிடும் பொழுது, நபி (ஸல்) கண்டமனிதனைப் புறக்கணித்து விட்டால் கனவு கண்டவன் அல்லாஹ்வை அஞ்சி, தவ்பாச் செய்து கொள்ள வேண்டும். அவ்வாறு நபி (ஸல்) அவர்கள் புறக்கணிப்பது போல் கனவு கண்டவனைச் சார்ந்தவர்கள் பகையாளியாகவும், அவன் மீது சினங் கொள்ளவும் நேரிடும். சில பொழுது, இவ்வாறு கண்டவன் தன் கூட்டத்தாரையும், தன் குடும்பத்தாரையும் பிரிந்திட நேரிடும். சில சமயம், பெற்றோரை இழந்து அனாதையாக நேரிடும். |
| 38. நபி (ஸல்) அவர்களை ஒரு பெண் காண்பாளாயின் | சிறந்த நற்பதவியை அடையப் பெறுவாள். ஒரு வேளை அவள் தங்கடங்களால் சோதிக்கப்படுவாள். |
| 39. ஒரு ஸாலிஹான பெண் கண்டால் | கண்டவள் பணக்காரியாக இருந்தால் தன் பொருளை நல் வழியில் செலவு செய்வாள். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 40. கடனாளி கண்டால் | அவனின் கடன்கள் தீரும். |
| 41. நோயாளி கண்டால் | நலம் பெறுவான். |
| 42. ஹஜ்ஜுச் செய்யாதவன் கண்டால் | ஹஜ்ஜு நிறைவேறும். |
| 43. பஞ்ச பூமியில் கூலமா கயிருப்பது போல் கண்டால் | செழிப்பு ஏற்படும். அதற்கு மாற்றமாகக் கண்டால், அவ் விடத்தையுடையவர்கள் மார்க்கத் தில் பலவீனர்களாகி, பித்அத்து கள் வெளியாவதை அக்கனவு அறிவிக்கும். |
| 44. நபி (ஸல்) அவர்களின் மீது மாறாத அன்பு கொண் டவன் கனவில் அவர்களின் இரத்தத்தை இரகசியமாகக் குடிப்பது போல் கண்டால் | கண்டவன் பீஸபீலில் ஷஹீதாவான். பகிரங்கமாக அவர்களின் இரத்தத்தை குடிப் பது போல் கனவு கண்டால், நபி (ஸல்) அவர்களின் குடும் பத்தாரையும், அவர்களைச் சேர்ந்தவர்களையும் கொலைச் செய்ய எண்ணுபவனுக்கு இவன் உதவி செய்வான். |
| 45. நபி (ஸல்) அவர்களை ஒருவன் எதன் மீதோ ஏறியி ருக்கும் நிலையில் கண்டால் | கண்டவன் ஒன்றின் மீது ஏறிச் சென்று அவர்களை ஜியா ரத்துச் செய்வான். |
| 46. நபி (ஸல்) அவர்கள் நடந்து செல்பவர்களாகக் கண்டால் | அவ்வாறு கண்டவன் நடந்து சென்று அவர்களை ஜியாரத்துச் செய்வான். |
| 47. நபி (ஸல்) அவர்கள் நிற்பது போல் கண்டால் | இவனின் காரியங்களும், அக்கால ஆட்சியாளரின் காரியங்களும் நன்முறையில் நடந்தேறும். |

பொருளடக்கம்



முதற் பதிப்பு : பிப்ரவரி 1992
புதிய பதிப்பு : 2009



**விலை ரூ. 36-00**

வெளியிடுவோர்:
**காஜியார் புக் டிப்போ**
முஸ்லிம் தெரு, M. சாவடி, தஞ்சாவூர் - 613001.
தபால் பெட்டி எண்: 29. போன்: 04362 235529

அச்சு அமைப்பு:
சுலைமானியா பப்ளிஷர்ஸ்
போன் : 252 70 550, 94443 55551

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 48. நபி (ஸல்) அவர்களை இறந்துவிட்ட நிலையில் கண்டால் | அவனுடைய குடும்பத்திலுள்ள பெரியவர்கள் இறந்து விடுவர். |
| 49. நபி (ஸல்) அவர்களின் ஜனாஸாவை மட்டும் கண்டால் | அவர்களைக் கண்ட இடத்தில் பெரும் முஸீபத்துகள் பீடிக்கும். |
| 50. நபி (ஸல்) அவர்களின் அடக்கவிடத்தை ஜியாரத்துச் செய்வதாக ஒருவன் காண்பானாயின் | பல பொருளாதார வசதிகளைப் பெற்றுக் கொள்வான். |
| 51. நபி (ஸல்) அவர்களின் வழித் தோன்றலில் இல்லாதவனாக கண்டவன் இருக்க, அவன் தன்னை நபிகளாரின் பிள்ளையாகக் கண்டானாயின் | அவன் தன்னுடைய ஈமானும், யகீனும் தூய்மையான நிலையில் இருப்பதை அறிந்து கொள்வான். |
| 52. உலகப் பொருள்களில் ஒன்றை நபி (ஸல்) அவர்கள் தனக்குக் கொடுப்பதாக ஒருவன் கண்டால் | கண்டவன் நலவைப் பெற்றுக் கொள்வான். |
| 53. ஒரு மனிதன் தானே நபிகளாரின் வடிவாக ஆகி அல்லது அவர்களின் ஆடையயை அணிந்து கொண்டதாக, அவர்களின் முத்திரையை அல்லது அவர்கள் கத்தியைக் கொடுப்பதாகக் கண்டால் | அவ்வாறு கண்டவன் ஆட்சி செய்ய எண்ணங் கொண்டவனாகயிருந்தால் ஆட்சியைப் பெற்றுக் கொள்வான். உலகத்தில் உள்ளவர்கள் அவனுக்கு வழிப்பட்டு நடப்பார்கள். இவ்வாறு கண்டவன் சிறப்புறுவான். இல்மைத் தேடும் நாட்டங் கொண்டவனாயிருந்தால், அவன் எண்ணப்படி அறிவைப் பெற்றுக் கொள்வான். கனவு கண்டவன் ஏழையாகயிருந்தால் சீமானாவான். திருமணம் |

| | |
|---|---|
| | முடிக்காதவனாயிருந்தால் திருமணம் முடிக்கப் பெறுவான். கரு உண்டான பெண்ணோ, அவளின் கணவனோ நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டார்களாயின் பிறக்கும் குழந்தை ஆணாகப் பிறக்கும். |
| 54. ஒருவன் தன்னை நபி (ஸல்) அவர்களின் தந்தையாகக் கனவில் கண்டால் | அவ்வாறு கண்டவனின் ஈமானும் யகீனும் அழிந்துவிடும். நவூதுபில்லாஹி மின்ஹு. அதை விட்டும் அல்லாஹ் நம்மைப் பாதுகாப்பானாக! நபி (ஸல்) அவர்களை ஒருவன் கண்டதால் உண்டாகும் பரக்கத்து கண்டவனுக்கு மட்டும் சேராது. முஸ்லிம்கள் அனைவருக்குமே சேர்ந்திடும். |
| 55. நபிகளாரின் மனைவியரில் ஒருவரைத் தாயாகக் கண்டால் | ஈமான் மிகுதியாகும். |
| 56. நபிகளாரின் பின்னே நடக்கக் கண்டால் | அவர்களின் சுன்னத்தைப் பின்பற்றியவன் ஆவான். |
| 57. நபி (ஸல்) அவர்கள் ஒருவனின் மனைவியைப் பார்ப்பது போல் கண்டால் | அப்பெண் உண்மையை எடுத்து ஏவுபவளாக இருப்பாள். |
| 58. ஒருவன் நபி (ஸல்) அவர்களுடன் இருந்து அவர்களுடன் சேர்ந்து உண்பதாகக் காண்பானாயின் | அவன் தன் பொருளுக்குரிய ஜகாத்தை நிறைவேற்றிட ஏவப்பட்டுள்ளான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 59. நபி (ஸல்) அவர்கள் தாம் மட்டும் தனியாக உண்பதாக ஒருவன் காண்பானாயின் | அவ்வாறு கண்டவன் சதகா கொடாமல் விலகுவதை, அவன் சதகா கொடுக்குமாறு ஏவப்படுகிறான் என்பதை அறிவிக்கும். |
| 60. நபி (ஸல்) அவர்கள் செருப்பின்றி நடப்பதாக ஒருவன் கண்டால் | அவ்வாறு கண்டவன் இமாம் ஜமாஅத்தில் சேர்ந்துத் தொழ ஏவப்பட்டுள்ளான். |
| 61. ஒருவன் தன்னுடலில் உள்ள இரத்தம் நபி (ஸல்) அவர்களின் இரத்தத்துடன் கலப்பது போல் கண்டால் | கண்ட மனிதன் ஒரு ஸையிது வம்சத்துடன் திருமண உறவு கொள்வான் அல்லது உலமாக்களுடன் திருமண உறவு கொள்வான். |
| 62. நபி (ஸல்) அவர்கள் ஏதும் ஒரு பொருளைக் கொடுக்கக் கண்டால் | கண்டவன் இல்மைப் பெற்று உண்மையைப் பின்பற்றி நடப்பான். |
| 63. நபி (ஸல்) குத்பா ஓதக் கண்டால் | கனவு கண்டவன் நல்லதை ஏவி தீயதைத் தடுப்பான். |
| 64. அவர்கள் பாங்கு சொல்வதாகக் கண்டால் | கண்ட இடத்தில் செழிப்பு உண்டாகும். |
| 65. நபி (ஸல்) அவர்கள் மஸ்ஜிதுந் நபவிய்யியிலோ, ஹரமிலோ, தங்கள் இல்லத்திலோ இருப்பதாகக் கண்டால் | கண்டவன் கண்ணியத்தையும், வலிமையையும் பெற்று கொள்வான். |

## 8. அன்பியாக் (நபிமார்)களைக் காணுதல்

நபிமார்களைக் கனவில் கண்ட பலனும் அமரர்களாகிய மலக்குகளைக் கனவில் கண்ட பலனும் ஒன்றேயாகும். எனினும் அமரர்கள் (மலக்குகள்) 'ஹாளிரா'னதாகக் கனவு கண்டால் அக்கனவு நன்மாராயத்தை அறிவிக்கும். அன்பியாக்களைக் கண்டால் அவ்வாறு அறிவிக்காது.

அபூஸயீத் (ரஹ்) என்னும் பெரியார் கூறுகின்றார்கள்:

நபிமார்களைத் தத்தம் நல்ல நிலையிலும், வடிவத்திலும் கண்டால் கனவு கண்டவனுக்கு நன்மாராயம் உண்டாகும். அவற்றுக்கு மாற்றமாகக் கண்டால் கனவு கண்டவனின் நிலை கெட்டு, அவனை முஸீபத்துகள் பீடிப்பதை அறிவிக்கும். எனினும், அவற்றை விட்டும் ஈடேற்றம் பெறுவான்.

| கனவு | பலன் |
|---|---|
| **நபிமார்களை வெட்டுதல்** | |
| 66. ஒருவன் தன் கனவில் நபிமார்களில் ஒருவரை வெட்டியதாகக் கண்டால் | அவ்வாறு கண்டவன் தன்னிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள பொருளில் சதிமானம் செய்வான் வாக்குறுதியையும் முறித்து விடுவான். |
| **ஆதம் (அலை)** | |
| 67. ஒருவன் பாவா ஆதம் (அலை) அவர்களை, அவர்களின் உருவ அமைப்பில் கண்டால் | கண்ட மனிதன் 'விலாயத்'திற்குத் தகுதி பெற்றவனாயிருந்தால் அதனைப் பெற்றுக் கொள்வான். |
| 67 a.) அவர்களுடன் பேசுவதாகக் கண்டால் | அறிவைப் பெற்றுக் கொள்வான். இன்னொரு கூற்றின்படி, ஆதம் (அலை) அவர்களை கண்டவன் ஒரு விரோதியால் மருண்டு சில காலத்திற்குப் பின்னர் அச்சம் நீங்கித் தெளிவு பெறுவான். |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 68. ஆதம் (அலை) அவர்களின் நிறம் மாறுபட்டிருப்பதாகக் கண்டால் | கண்டவன் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாறி பின்னர் முந்தைய இடத்தை விடச் சிறந்த ஓர் இடத்தைப் பெற்று கொள்வான். |
| **ஷீது (அலை)** | |
| 69. நபி ஷீது (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவன், பணம், மனைவி, மக்கள், குடும்ப நிர்வாகம் முதலியவற்றை அடையப் பெறுவான். |
| **இத்ரீஸ் (அலை)** | |
| 70. ஒருவன் நபி இத்ரீஸ் (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவன் மார்க்கத்தில் பேணுதலாக இருப்பான். அதன் காரணமாக அவன் கண்ணியப் படுத்தப்படுவான். அவனின் இறுதி முடிவு அழகியதாகயிருக்கும். |
| **நூஹ் (அலை)** | |
| 71. நபி நூஹ் (அலை) அவர்களைக் கண்டால் | அவர்களைக் கண்டவனின் வாழ்நாட்கள் நீண்டு, பகைவர்களால் துன்பங்களுக்கு ஆளாகி பின்னர் இவன் வெற்றி பெறுவான். அல்லாஹ்வுக் மிகுதியாக நன்றி செலுத்துவான். பின்னர் ஒரு பணிவான பெண்ணைத் திருமணம் செய்து அவள் இவனுக்குச் சில குழந்தைகளைப் பெற்றுத் தருவாள். |
| **ஹூது (அலை)** | |
| 72. நபி ஹூது (அலை) அவர்களைக் கண்டால் | பகைவர்கள் இவனுக்கு அநியாயம் செய்வார்கள். பின்னர் இவனே அவர்களை வெல்வான். |
| **ஸாலிஹ் (அலை)** | |
| 73. நபி ஸாலிஹ் (அலை) அவர்களைக் கண்டால் | அதே நிலைதான் இவனுக்கும் ஏற்படும். |

இப்றாஹீம் (அலை)

74. நபி இப்றாஹீம் (அலை) அவர்களைக் கண்டால்

கண்டவன் ஹஜ்ஜுச் செய்வான். இன்னொரு சொல்லின் படி, அநியாயம் மிக்க ஆட்சியாளர் மூலம் இவனுக்குத் துன்பங்கள் விளைந்து, பின்னர் அல்லாஹ்வின் பேருதவியால் துன்பம் நீங்கி, அருட்கொடைகளும், ஸாலிஹான பெண்ணும் கிடைக்கப் பெறுவான். இன்னொரு கூற்றின்படி, தந்தை இவனை நோவினைச் செய்வான் எனக் கூறப்பட்டுள்ளது.

ஹிகாயத் : ஸம்மாக்கு இப்னு ஹர்பு கஃபு என்பவர்கள் தம் கனவில் நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் தோன்றி தங்கள் கையால் அவர்களின் கண்களில் தடவி "புராத் என்னும் ஆற்றில் வந்து முழுகிடுவீர். அல்லாஹ் உம்முடைய பார்வைக்கு ஒளி தருவான்" என்று கூறுவது போல கண்டு, அப்படியே செய்தார்கள். அவர்களுக்கு அல்லாஹ் பார்வையைத் தந்தான்.

இஸ்ஹாக் (அலை)

75. இஸ்ஹாக் (அலை) அவர்களை நல்ல நிலையில் இருப்பது போல் கண்டால்.

அவ்வாறு கண்டவனின் குடும்பத்திலுள்ள பெரியவர்ளால் இவனுக்குப் பல வகையான துன்பங்கள் தொடரும். பின்னர் அல்லாஹ்வின் உதவியால், துன்பங்கள் நீங்கப் பெற்று, இவனுக்குச் சிறப்பும் மரியாதையும் நன்மாராயமும் கிடைக்கப் பெறுவான். இவனின் வழிதோன்றலரில் ஆட்சியாளர்களும், தலைவர்களும், நல்லோர்களும் அதிகமாவார்கள்.

76. இஸ்ஹாக் (அலை) அவர்களின் நிலை மாறு பட்டிருப்பதைக் கண்டால்

கண்டவனின் கண் பார்வை போய்விடும்.

நபி இஸ்மாயீல் (அலை)

77. நபி இஸ்மாயீல் (அலை) அவர்களைக் கண்டால்.

உயர்வும், நாகரீகமும் கிடைக்கப் பெறுவான். இன்றொரு கூற்றின்படி, கனவு கண்டவன் பள்ளிவாசல் கட்டு வான். அல்லது கட்டுவதற்கு உதவியாக இருப்பான். இன் னொரு சொல்படி கண்டவன் தன் தந்தை மூலம் துன்பம் ஏற்படும். பின்னர் அல்லாஹ் வால் துன்பங்கள் இலேசாக் கப்படும்.

யஃகூப் (அலை)

78. ஒருவன் நபி யஃகூப் (அலை) அவர்களைக் கண்டால்

கண்டவனுக்குத் தம் மக்களில் ஒருவன் மூலம் கடினமான சலிப்புகள் ஏற்படும். பின்னர் அல்லாஹ்வால் நீக்கப்படும். அவன் விரும்பிய யாவும் கிடைக்கப் பெறுவான்.

யூஸுஃப் (அலை)

79. நபி யூஸுஃப் (அலை) அவர்களைக் கண்டால்

கண்டவனுக்கு அநீதியும், சிறைவாழ்க்கையும், தன் உறவினர்களால் வெறுப்பும் ஏற்படும். பின்னர் ஆட்சி கிடைக்கும். பகைவர்கள் இவனுக்குப் பணிந்து ஊழியம் செய்வார்கள். கனவின் விளக்கத்தில் உடன் பிறந்தவனைப் பகைவன் என்று சொல்லப்படும். இவ்வாறு கண்டவன் அதிக தர்மம் செய்யக் கூடியவன் என்பதற்குரிய ஆதாரமாகும்.

## கனவின் விளக்கம்

ஹிகாயத்: பெரியார்களில் ஒருவருக்கு ஹஸ்ரத் யூஸுஃப் (அலை) அவர்கள் தங்கள் ஒற்றைக் காலுறையை கொடுப்பது போல் கனவில் கண்டார்கள். கண்டு எழுந்ததும் அவர்கள் கனவிற்கு விளக்கம் சொல்லும் கல்வியாளராக ஆகிவிட்டார்கள்.

ஹிகாயத்: இப்றாஹீம் இப்னு அப்துல்லாஹில் கிர்மானீ (ரஹ்) அவர்கள், நபி யூஸுஃப் (அலை) அவர்களிடம், "அல்லாஹ் தங்களுக்குக் கற்றுக் கொடுத்ததில் எனக்கும் கற்றுக் கொடுங்கள்" எனக் கேட்கவும், நபி அவர்கள் தங்கள் சட்டையை அவர்களுக்கு அணிவித்தார்கள். விழித்துப் பார்த்த பொழுது கனவுக்குப் பலன் கூறிடும் ஆலிமாக கிர்மானீ (ரஹ்) ஆகிவிட்டார்கள்.

| | |
|---|---|
| **யூனுஸ் (அலை)** | |
| 80. நபி யூனுஸ் (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவன் துன்பத்தில் சிக்கிய பின்னர் அல்லாஹ்வால் அதனை விட்டும் நீங்கப் பெற்று ஸலாமத்துப் பெறுவான். கனவு கண்டவனுக்கும் தன் கூட்டத்தாரில் மோசம் செய்திடும் மனிதர்களுக்கும் மத்தியில் கொடுக்கல் வாங்கல்களில் ஈடுபடுதல் ஏற்படும். |
| **ஷுஐப் (அலை)** | |
| 81. ஷுஐப் (அலை) அவர்களின் முடி சிலிர்த்துக் கொண்டிருக்கும் நிலையில் கண்டால் | கனவு கண்டவனின் பார்வைப் போய்விடும். |
| 82. அவர்களை வேறு நிலைகளில் கண்டால் | தன் கூட்டத்தார் இவனுக்கு அநியாயம் செய்வார்கள். பின்னர் இவன் அவர்களை அடக்கியாள்வான். சில சமயம் அவர்களைக் கண்டவனுக்குப் பெண் உண்டாவதை அறிவிப்பதாகும். |

| *கனவின்* | *விளக்கம்* |
|---|---|
| **மூஸா (அலை)** | |
| **83.** மூஸா (அலை) ஹாரூன் (அலை) ஆகிய இவர்களைக் கண்டாலோ, இருவரில் ஒரு வரைக் கண்டாலோ | கண்டவன் கையால் வம்பனான அநியாயக்காரன் அழிவான். கனவு கண்டவன் படையெடுக்க நாடியிருப்பானாயின் வெற்றி பெறுவான். |
| **அய்யூப் (அலை)** | |
| **84.** அய்யூப் (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவன் தனக்கும், தன் மனைவி, மக்கள், பணம், காசு முதலியவற்றினால் துன்பத்தால் சோதிக்கப்படுவான். பின்னர் அவை இரட்டிப்பாகி வாழ்க்கையில் செழிப்பும், மகிழ்ச்சியும் அல்லாஹ்வினால் கொடுக்கப் பெறுவான். |
| **தாவூத் (அலை)** | |
| **85.** தாவூத் (அலை) அவர்களைக் கண்டால் | ஆட்சியையும், ஆற்றலையும் பெற்றுக் கொள்வான். |
| **ஸுலைமான் (அலை)** | |
| **86.** நபி ஸுலைமான் (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவனுக்கு ஆட்சியும், இல்மும், விளக்கமும் கொடுக்கப்படும். ஆனால் அவர்களை மிம்பரிலோ, கட்டிலிலோ மய்யித்தாக இருக்கக் கண்டால், அது சமயம் ஓர் ஆட்சியாளனோ, ஒரு தலைவனோ இறந்துவிட்ட செய்தி சில காலத்திற்குப் பின்னர் அறிய வரும். இன்னொரு கருத்தின்படி, அவர்களைக் கனவில் கண்டவனுக்கு நல்லவனும், பகைவனும் கிடைப்பான். மிகுதியாகப் பயணங்கள் போவான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| **ஜகரிய்யா (அலை)** | |
| 87. ஒருவன் தன் கனவில் நபி ஜகரிய்யா (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவனுக்கு முதிய வயதில் குழந்தைப் பிறக்கும். |
| **யஹ்யா (அலை)** | |
| 88. யஹ்யா (அலை) அவர்களைக் கனவில் கண்டால் | கண்டவனுக்குப் பத்தினித் தனத்தையும், தக்வாவையும், பாதுகாப்பையும் கொடுக்கப்படும். இவன் வாழும் காலத்தில் இவனைப் போல் ஒருவனுமில்லை என்ற நிலை ஏற்படும். |
| **ஈஸா (அலை)** | |
| 89. நபி ஈஸா (அலை) அவர்களைக் கனவில் கண்டால் | அவர்களைக் கண்டவன் எல்லா மக்களுக்கும் பயனளிப்பவனாயும், பரக்கத்துப் பெற்றவனாயும், நலவும், பயணங்கள் அதிகமாகச் செய்பவனாயும், மருத்துவக் கல்வியும், மற்ற கல்வி அறிவுகளையும் கொடுக்கப்பட்டு கண்ணியப்படுத்தப் படுவான். |

ஹஸனுப்னு அலீ (ரலி) அவர்கள் ஈஸா (அலை) அவர்களைக் கனவில் கண்டு, “என் மோதிரத்தில் என்ன பெயர் பொறிக்க வேண்டும்” எனக் கேட்டபொழுது,

“லாயிலாஹ இல்லல்லாஹுல் ஹக்குல் முபீன்” என்று பொறிக்கவும்“ எனக் கூறினார்கள். அதன் மூலம் துன்பங்களும் துயரங்களும் ஒழிந்து போகும் என்றனர். ஒரு பெண் கருவுற்றிருக்கும் நிலையில் ஈஸா (அலை) அவர்களைக் கண்டால், அவள் ஆண் குழந்தை பெறுவாள்.

| கனவு | பலன் |
| --- | --- |
| **மர்யம் (அலை)** 90. மர்யம் (அலை) அவர்களை ஆண் குழந்தைப் பெற்ற நிலையில் ஒருவன் கண்டால் | அவ்வாறு கண்டவன் தலைமைப் பதவி அடையப் பெறுவான். அவர்களை ஒரு பெண் கருவுற்ற நிலையில் கண்டால், முழுமையான ஓர் ஆண் குழந்தையைப் பெற்றுக் கொள்வான். அப்பெண் அவதூறுகளுக்கு ஆளானவளாயிருந்தால் அதிலிருந்து காக்கப் பெறுவாள். |
| 91. ஒருவன் மர்யம் (அலை) அவர்களுக்கு ஸஜ்தா செய்வதாகக் கண்டால் | கண்டவன் ஆட்சியாளருடன் உரையாடி ஆட்சியாளருடன் இருப்பான். |
| **தானியால் ஹகீம்** 92. தானியால் ஹகீம் அவர்களைக் கண்டால் | புகழ்ப் பெயரும், கனவின் விளக்க இல்மும் கொடுக்கப் படுவான். ஒரு வம்பனால் சில சங்கடங்களுக்கு ஆளாகி, பின்னர், இவனே வெற்றி பெறுவான். இன்னொரு கூற்றின்படி ஓர் அரசனாகவோ அமைச்சனாகவோ ஆவான். |
| **கிளுர் (அலை)** 93. கிளுர் (அலை) அவர்களைக் கண்டால் | கண்டவன் தன் வாழ்க்கையில் பஞ்சத்திற்குப் பின் செழிப்பையும், அச்சத்திற்குப் பின் அச்சமற்ற நிலையையும் எய்துவான். |
| 94. ஒருவன் தன் கனவில் நபிமார்களில் ஒருவர் அடிப்பதாகக் கண்டால் | இவ்வுலக தீனின் துன்யாவின் வாழ்க்கையில் தன்னுடைய செயல்களில் மேலெண்ணத்தைப் பெற்றுக் கொள்வான். |
| 95. ஒருவன் தன் கனவில் தானே நபிமார்களில் ஒரு | எந்த நபியாகத் தான் ஆகிவிட்டதாகக் கண்டானோ |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| நபியாக ஆகிவிட்டது போல் கண்டால் | அம்மனிதன் அந்த நபி இவ்வுலகில் என்னென்ன துன்ப துயரங்களை ஏற்றிருந்தார்களோ அவற்றை இம்மனிதனும் ஏற்க நேர்ந்து பின்னர் வெற்றி பெற்று மக்களை அல்லாஹ்வின் பால் அழைப்பவனாக ஆகிவிடுவான். |

அஸ்ஹாபுகளாகிய நபித் தோழர்கள், தாபியீன்கள், மற்றுமுள்ள நல்லடியார்கள் முதலியவர்களைக் கனவில் காண்பது பற்றிய விளக்கம், அவர்களுள் ஒருவரையோ, அவர்கள் அனைவரையுமோ உயிருடன் இருப்பதுபோல் கனவில் கண்டால்,

கண்டவன் தன் தீனிலும் குடும்பத்திலும் மிகவும் வலிவுடனும், மிக்க மேன்மையுடனும், உயர்நிலையையும் அடையப் பெறுவான். தன்னுயை காரியங்கள் யாவும் மேலானதாக ஆகிவிடுவதை அக்கனவு அறிவிக்கும்.

ஆனால் கனவு கண்ட மனிதன் அவர்களில் தானே ஒருவனாக ஆகிவிட்டது போல் கண்டால் சில தங்கடங்களுக்கு ஆளாகிப் பின்னர் வெற்றி பெறுவான். அவர்களைப் பல முறை கனவில் கண்டால், கண்டவனின் குடும்ப நிர்வாகம் செம்மையாக நடைபெறும்.

| கனவு | பலன் |
|---|---|
| **அபூபக்கர் (ரலி)** | |
| 96. ஹல்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் உயிர் வாழ்வதைக் கண்டால் | கண்ட மனிதன் அல்லாஹ்வின் அடியார்கள் மீது அன்புடன் இருப்பான். கண்ணியப் படுத்தவும் படுவான் |
| **உமர் (ரலி)** | |
| 97. ஹல்ரத் உமர் (ரலி) அவர்களைக் கனவில் கண்டால் | மார்க்கத்தில் வலுவாகவும், தன் சொல்லில் உண்மையுடனும், நீதியுடனும், தன் கீழ் உள்ளவர்களிடம் அன்பாகவும் இருப்பது கொண்டு கண்ணியப் படுத்தப்படுவான். |

| | |
|---|---|
| உஸ்மான் (ரலி) | |
| 98. ஹஸ்ரத் உஸ்மான் (ரலி) அவர்களை ஹயாத் தாகக் கண்டால் | கண்டவனுக்கு ஒழுக்கத் தையும், அச்சத்தையும் கொடுக் கப்படுவதுடன் பொறாமைக் காரர்கள் அவனுக்கு அதிகமாகி விடுவர். |
| அலீ (ரலி) | |
| 99. ஹஸ்ரத் அலீ (ரலி) அவர்களை உயிர் வாழ் வதாகக் கண்டால் | கண்டவன் இல்மு கொடுக்கப் பெறுவதுடன் கண்ணியப்படுத் தப்படுவான். |
| 100. ஓரிடத்தில் எல்லோரும் ஒன்றுகூடி ஓதிக் கொண்டி ருப்பது போல் கண்டால் | அங்குள்ளவர்களில் அரசர், வணிகர், உலமாக்கள் போன்ற வர்கள் செல்வத்தையும், செழிப் பையும், மகிழ்ச்சியையும், நீதி நெறிகளையும் அடையப் பெறுவார்கள். |
| அர்ஷ் | |
| 101. ஒருவன் அல்லாஹ்வின் 'அர்ஷை'க் கிதாபுகளில் கூறப் பட்டுள்ள முறைப்படிக் கண் டால் | எல்லா நிலைகளிலும் கண்ட வனுக்கு நன்மை ஏற்படும். இன்னொரு சொல்லின்படி, பெரிய அரசனாக ஆவான். |
| 102. 'அர்ஷு' அலங்கரிக் கப்பட்டிருப்பதாகக் கண்டால் | கண்டவன் மேன்மையான ஒருவனிடம் நட்புக் கொள்வான். அவன் மூலம் இவனுக்குச் சிறப்பும், தலைமைப் பதவியும் உண்டாகும். |
| 103. 'அர்ஷ்' பல வண் ணங்களால் அலங்கரிக்கப் பட்டிருப்பதாகக் கண்டால் | கண்ட மனிதன் அறிவு மிக்கத் தலைமையுடன் சேர்ந்திருப்பான்; அவனின் தகுதியும் உயர்வு பெறும். |
| 104. 'அர்ஷ்' அழகற்றதாகக் காணப்பட்டால் | கண்டவன் குறைபாடுகள் உள்ளவனாயும், தூற்றப்பட்ட வனாயும் இருப்பான். |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 105. 'அர்ஷ்' எவ்வகைக் குறைபாடுமின்றி நேராக நிற்பது போல் கண்டால் | தன் ஆட்சியதிகாரத்தில் நிலைத்திருப்பான். |
| **குர்ஸீ** | |
| 106. அல்லாஹ்வின் 'குர்ஸீ' யைக் கண்டால் | 'இல்மு' ஏற்படும். இன்னும் சிலர் கூறுகின்றனர், 'குர்ஸீ' யைக் கண்டால் ஆகிலான காமிலான மனிதனைக் காண நேரிடும். |
| 107. 'குர்ஸீ' ஒளியுடனும் அலங்கரிக்கப்பட்டும் இருப்பதாகக் கண்டால் | கண்டவன் நற்குணமும் நற்செயலும் கொண்டு மிளிர்வான். |
| 108. 'குர்ஸீ'யை ஓர் ஆலிம் கண்டால் | கண்ட ஆலிம் சிறப்படைவார். நற்செயல் புரியும் ஆலிம்களால் இவருக்கு நலவும், பொருளும் கிடைக்கும். சாதாரண மனிதன் குர்ஸீயைக் காண்பதை விட ஓர் ஆலிம் காண்பது ஏற்றமானதாகும். பொதுவாக 'குர்ஸீ'யை ஷரீஅத்துக்கு மாற்றமில்லாத நிலையில் காண்பது, கண்டவனுக்கு எப்பொழுதும் நலவுதான் ஏற்படும். அதற்கு மாற்றமாகக் கனவு கண்டால் கண்டவனுக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் நன்மையில்லை. |
| **லவ்ஹுல் மஹ்பூள்** | |
| 109. 'லவ்ஹுல் மஹ்பூள்' என்னும் விதி வசப்பலகையைக் கண்டால் | வாக்கு ஒப்புக் கொள்ளப்பட்ட முஃமினான ஆலிமான மனிதன் என்று விளக்கமாகும். மேலும், அவ்வாறு கண்டவன் அல்லாஹ்வின் பாதையில் தன் பொருளைச் செலவு செய்யும் |

சிறந்த மனிதன் என்பது விளக்கமாகும். கிர்மானி (ரஹ்) கூறுகின்றார்கள், அவ்வாறு கண்ட மனிதனுக்கு 'இல்மு'ம் குர்ஆனுடைய நுண்பொருளும் உண்டாகும். ''லவ்ஹுல் மஹ்பூளை இலேசாக, மரியாதைக் குறைவாகக் கண்டவனுக்கு கெடுதி ஏற்படும்" என்று ஜாபிருல் மஃரிபீ (ரஹ்) கூறுகின்றார்கள்.

110. ஒருவன் தன் பெயர் லவ்ஹுல் மஹ்பூளில் எழுதப் பட்டிருப்பதாகக் கண்டால்

கண்டவனின் 'அஜல் இறுதி முடிவு' நெருங்கி விட்டதாகப் பொருள்படும்.

111. குழந்தைகள் எழுதிப் படித்திடும் கரும் பலகையை ஒருவன் கனவில் கண்டால்

"கண்டவன் தலைமைப் பதவியையும், பிள்ளைகளும் கொடுக்கப்படுவதுடன், அவனுக்கு நேர் வழியும் தன் செயல்கள் நிறைவேறுவதையும் பெற்றுக் கொள்வதையும் குறிக்கும். அவ்வாறு கண்டவன் ஆலிமாகவும் இருப்பான்'' என்பதாக இமாம் ஜஃபருஸ் ஸாதிக் (ரஹ்) அவர்கள் விளக்கம் கூறுகிறார்கள்.

**கலம்**

112. எழுதும் கலம் எனும் பேனாவைக் கண்டால், அது தன் கையில் இருப்பதாகக் கண்டால்

கண்டவனுக்கு அல்லாஹ் சிறப்புமிக்க ஆலிமான குழந்தைகளைக் கொடுப்பான். இன்னொரு சொல்லின்படி இவனுக்கு இல்மும் வழிபடுதலும் ஏற்படும்.

113. எழுது கோலால் எழுதுவதாகக் கண்டால்

தன் நிலை நன்றாக இருப்பதுடன் தன்னுடைய தேவைகளும் நிறைவேறும்.

| | |
|---|---|
| | மேலே சொன்னவற்றுக்கு மாற்றமாக நிகழும். |
| 114. எழுது கோலில் குறை ஏதும் இருப்பதாகக் கண்டால் | அவனின் செயல்கள் நிறைவேறாது. |
| 115. பேனாவால் எழுதிய பொழுது அதில் எழுத்துக்கள் விழாதிருந்தால் | |
| 116. ஒரு பெரியார் தம் கையில் நான்கு பேனாக்கள் இருப்பதாகக் கனவில் கண்டு, அதன் விளக்கம் யாதெனக் கேட்டார்கள். | அதன் விளக்கம் நான்கு 'வஜீஃபா'கள் என்று பொருள் எனக் கூறப்பட்டது. கண்டவாறே அப்பெரியார் நான்கு 'வஜீபா' களைக் கிடைக்கப் பெற்றார்கள். ஒருவன் தன் கையில் சில எழுதுகோல்கள் இருப்பதாகக் கண்டாலும் அதுவும் நலவேயாகும். |
| | தன் வேலையில் உதவி கிடைக்கும். |
| 117. பென்சில் சீவக் கண்டால் | உதவி கிடைக்காது. |
| 118. சீவ முடியாத நிலையினை கண்டால் | அவ்வாறு கண்ட மனிதன் தீயச் செயலை செய்வான். |
| 119. இன்ன வகை மை என்று அறிய முடியாத எழுது கோலால் எழுதக் கண்டால் | கண்டவனுக்கு நன்மையில்லை. |
| 120. பேனா உடைந்து விட்டதாகவோ, பழுதுபட்டிருப்பதாகவோ கண்டால் | நன்மையில்லை. |
| 121. எழுதப் படிக்கத் தெரியாதவன் பேனாவால் எழுதுவதாகக் கண்டால் | இறப்புகள் நிகழும். |

## கனவின் விளக்கம்

122. 'சித்ரத்துல் முன்தஹா' என்னும் இடத்திலுள்ள இலைகள் யாவும் அல்லது அவற்றில் சில உலர்ந்திருப்பதாகக் கண்டால்

அப்பெயருடையவனின் இறுதி முடிவு நெருங்கி விட்டது என்று பொருள். அந்த இலை விழுந்து விட்டதாகக் காணப்பட்டால் அவனின் வயது முடிந்து விட்டதைக் குறிக்கும்.

123. அந்த இலைகளில் மஞ்சளாக ஏதோ கிறுக்கப்பட்டிருப்பதாகக் கண்டால்

முஸ்லிம்களுக்கு முன்னிலை வகிப்பார் என்பதாகும். ஒருவர் கஃபாவை அது அதிகமானதாவோ, குறைவாகவோ இருப்பதாகக் கண்டால் கண்டவர் முஸ்லிம்களுக்கு முன்னிலை வகிப்பார். சில சமயம் கஃபாவைக் காண்பது அச்சம் தீர்வதை அறிவிக்கும். எனவே, மக்காவில் அன்றி வேறு இடங்களில் கஃபாவைக் கனவில் கண்டால் அவ்வூரில் வசிப்பவர்கள் அச்சம் இன்றி வாழ்வார்கள்.

### கஃபா

124. கஃபாவைக் கண்டால் அதன் பலன் என்ன?

கண்டவர் தம் மார்க்கத்தின் இணக்கத்தைப் பெற்றுக் கொள்வார்.

125. கஃபாவைக் கண்டு தவாஃப் செய்வதாக கண்டு அது ஏதும் இடர் விளை வித்ததாக இருந்தால்

கண்டவனுக்கு உதவிகளும், மேன்மையும், அரசு பொறுப்புகளும் ஏற்படும்.

126. ஒருவன் கஃபாவைக் கண்டால்

அவ்வாறு கண்டவன் இஸ்லாத்தின் கொள்கைகளைத் தன் முதுகிற்குப் பின்னால் தூக்கி எறிந்தவன் ஆவான் என்பது விளக்கமாகும்.

127. ஒருவன் கஃபாவை முதுகிற்குப் பின்னே இருப்பது போன்றோ, கஃபாவின் மேற்புறத்தில் தொழுவது போன்றோ கண்டால்

## கனவின் விளக்கம்

ஹிகாயத்: ஒரு மனிதர் ஸைய்யிதுனா ஸஃதுப்னு முஸய்யிப் (ரஹ்) அவர்களிடம் வந்து, "நான் கஃபாவிற்கு மேல் நின்று தொழுவது போல் கனவு கண்டேன்" என்று கூறவும். இதைக் கேட்ட அவர்கள்,

"நிச்சயமாக நீர் தீனுல் இஸ்லாத்தை விட்டும் வெளியாவதை உணர்கின்றேன்" என்றார்கள். உடனே அம்மனிதர், "பெரியார் அவர்களே! நான் இரண்டு மாதங்களாகக் 'கத்ரிய்யா'க் கூட்டத்தினரைப் பின்பற்றி வருகிறேன். இப்பொழுது அக்கொள்கையினரை விட்டும் நீங்கி தங்களிடம் சத்தியம் செய்து தவ்பாச் செய்து கொள்கிறேன்." என்று கூறி தவ்பாச் செய்து மீண்டார்.

| | |
|---|---|
| 128. ஒருவர் கஃபாவை முன்னோக்கி 'ருகூஉ, சுஜூது'களை நிரப்பமாகச் செய்வது போல் தொழக் கண்டால் | அவ்வாறு கண்ட மனிதன் அல்லாஹ்வின் நேர்வழியின் மீது இருப்பதுடன் ரஸூல் (ஸல்) அவர்களின் சுன்னத்துக்களையும் பின்பற்றி நடப்பான். எனினும், தொழுகையில் ஏதும் குறைவு செய்வது போல் கண்டானாயின், தீனிலும் குறைவுகள் ஏற்படும். |
| 129. கஃபாவின் திசை அறியாமல் தொழுவது போல் கண்டால் | அவன் மார்க்கத்தில் தட்டழிவதுடன், வழிகேட்டிலும் சிக்கிக் கொள்வான். |
| 130. தொழுகையில் அதிக ரக்அத்துகளைத் தொழுவது போல் கண்டால் | அவ்வாறு கண்டவன் இஸ்லாத்தைக் குறை கூறியவன் ஆவான். இஸ்லாமியச் சட்டங்களைச் சந்தேகித்தவன் ஆவான். |
| 131. கிழக்கு நோக்கித் தொழுவதுபோல் கண்டால் | கண்டவன் 'கத்ரிய்யா'க் கூட்டத்தாரின் சொல்லில் நம்பிக்கை வைப்பான். |

*கனவின் விளக்கம்*

| | |
|---|---|
| 132. மேற்கு நோக்கித் தொழுவதைக் கண்டால் | கண்டவன் 'ஜபரிய்யா'க் கூட்டத்தாரின் சொல்லில் சிக்கு வான். |
| 132 a) அவ்வாறே ஒருவன் தன்னை யூதனாக, கிறிஸ்த வனாக, நெருப்பை வணங்கு பவனாக ஆகிவிட்டது போல் கண்டானாயின் | அக்கூட்டத்தாருக்குச் செய்யப் படும் வேதனைகள் இவனுக்கும் கிடைக்கும். |
| 133. சிலையை வணங்கு வதாகக் கண்டானாயின் | அவன் அல்லாஹ்வின் மீதே பொய்யுரைத்து, பொய்யையே பிறருக்கும் கூறுவான். அல்லது குடிப்பதிலும், பாவங்கள் செய்வதிலும் ஆகிவிட நேரிடும். |
| 134. ஒரு வெண்மையான சிலையை வணங்குவதுபோல் கண்டால் | அவன் பாவத்தை நெருங்கு வான். அல்லது ஒரு பெண் ணிடம் பொய் செய்தியைக் கூறுவான். |
| 135. கண்ட அச்சிலை பொன்னாகயிருப்பதாயின் | கண்டவனுக்கு வருத்தத்தையும் கோபத்தையும் ஏற்படுத்தும். |
| 136. அச்சிலை மரத்தினால் இருப்பது போல் கண்டால் | மார்க்கத்தில் தீய மனிதர் களுடன் இருப்பான். |
| 137. அது இரும்பால் ஆன தாக, செம்பால், பித்தளையால் ஆனதாகக் காணப்படின் | அவ்வாறு கண்டவன் உலகத் தை ஆசை வைப்பான். |
| 138. நெருப்பை வணங்குவ தாகக் கண்டால் | அவன் தன் மார்க்கத்தில் ஷைத்தானைக் காண்பான். |
| 139. நெருப்பு எரிவதாகக் கண்டால் | கண்டவன் ஹராமான பொருளையே தேடுவான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 140. மக்களுக்குக் கிப்லாவை முன்னோக்கி இமாமத் செய்வது போல் கண்டால் | சில கூட்டத்தாருக்குத் தலைமையேற்று அவர்களுக்கு நீதி வழங்குவார். |
| 141. கிப்லாவை முன்னோக்காமல் இமாமத் செய்யக் கண்டால் | தன் தலைமையின் கீழுள்ள மக்களுக்கு அநீதி இழைப்பான். |
| பாங்கு<br>142. ஹஜ்ஜுடைய மாதத்தில் ஒருவர் பாங்கு சொல்வது போல் கண்டால் | சில சமயம் அவர் அதிகாரத்தில் இருந்து தீனுக்கு ஒளியேற்றுவார். |
| 143. ஹஜ்ஜுடைய மாதம் அல்லாததில் பாங்கு கூறக் கண்டால் அல்லது நேரங்களிலும் பாங்குச் சொல்வதாகக் கண்டால், எல்லாக் காலங்களிலும் பாங்கு சொல்வதாகக் கண்டால் | கண்டவரின் நிலைகள் யாவும் மக்களுக்கு மத்தியில் சரியானதாக வெளிப்படும். |
| 144. பள்ளியின் மினாரா இடிந்து விழுவது போல் கண்டால் | அந்த இடத்தைச் சேர்ந்தவர்கள் மார்க்க விஷயங்களில் வேறுபட்டு நிற்பார்கள். |
| 145. பாங்கு முழுமையாகாமல் சொல்லக் கண்டால் | கண்டவர் நலம் பெற்றவர்களிலும், நல்லோர்களிலும் ஆகி விடுவார். |
| 146. ஹஜ்ஜுடைய மாதத்தில் நிரப்பமாகாமல் பாங்கு சொல்வது போல் கண்டால் | கண்டவர் ஹஜ்ஜை முழுமையாக்கி வைப்பார். |
| 147. ஹஜ்ஜுடைய மாதமல்லாத காலங்களில் குறையாக பாங்கு சொல்வது போல் கண்டால் | இவன் எதையேனும் திருடுவான்; பின்னர் வெளியாகி விடும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 148. பள்ளிவாசல் கட்டுவது போல் பார்த்தால் | நலவின் மீது அக்கனவு அறிவிக்கும். திருமணம் செய்வதையும் ஜமாஅத்துடன் அம்மனிதன் நெருங்கி இருப்பதையும் குறிக்கும். |
| 149. ஒருவன் அறியாத மொழியில் பாங்குச் சொன்னதாகக் கண்டேன் என்று கூறினால் | கண்டவன் கள்ளன் ஆவான். |
| 150. தம் கனவில் தும்முவது போன்றும் அதற்கு மற்றொருவர், 'யர்ஹமுகல்லாஹ்' எனக் கூறுவது போன்றும் கண்டால் | கண்டவருக்கு ஹஜ்ஜும் உம்ராவும் செய்வது பற்றிய நல் அறிவிப்பாகும். |
| 151. ஹஜ்ஜுடைய மாதத்தில் தலைமுடி இறக்குவது போல் கண்டால் | கண்டவர் ஹஜ்ஜுச் செய்வார். ஆனால் ஹஜ்ஜுடைய மாதம் அல்லாதவற்றில் தலைமுடி சிரைக்கக் கண்டால் தம் பொருளை இழக்க நேரிடும். |
| 152. குத்பா ஓத, பயான் செய்யத் தெரிந்த ஒருவர் அவ்வாறு கண்டால் | சிறப்பான ஆட்சியையும் (அதிகாரத்தையும்) அடையப் பெறுவார். இவற்றுக்குத் தகுதியற்றவர் கனவு கண்டால், தூக்கில் போடப்படுவார். |

ஹிகாயத்: முஹம்மதுப்னு சீரீன் (ரஹ்) அவர்களிடம் ஒருவர் வந்து, "நான் பாங்கு சொல்வது போல் கனவு கண்டேன்" என்றார். "உம்முடைய தலை வெட்டப்படும்" என்று கூறினார்கள். அம்மனிதர் இருக்கும்போதே இன்னொருவர் வந்து, "நான் பாங்கு சொல்வது போல் கனவு கண்டேன்" என்றார்.

"நீர் ஹஜ்ஜு செய்வீர்" என்று கூறினார்கள். அப்பொழுது அங்கிருந்தவர்கள் " அவ்விருவரும் ஒரே மாதிரியான கனவைக் கண்டிருக்க, இருவருக்கும் வெவ்வேறான விளக்கங்களை ஏன் கூறினீர்கள் ?" என்று வினவினர்.

"முதல் மனிதரிடம் தீயவருக்குரிய அடையாளமிருப்பதைக் கண்டேன். அதனால் அவ்வாறு கூறினேன். இரண்டாம் மனிதரிடம் நல்லவர் என்பதற்குரிய அடையாளத்தைக் கண்டேன். எனவே அவருக்கு அவ்வாறு கூறினேன்" என்றனர். இறுதியில் இமாம் அவர்கள் கூறியவாறே நடந்தது.

பொதுவாக பாங்கு சொல்வது போல் கனவு காண்பது எல்லா மக்களுக்கும் ஒரு செய்தியை அறிவித்துக் கொடுப்பதையும் குறிக்கும்.

## 9. ஆடை, விரிப்புகளைக் காணுதல்

அணிகின்ற ஆடை வகைகளில் உயர்ந்தவை, தாழ்ந்தவை முதலியவற்றின் தரங்களுக்குத் தக்கவாறு கனவின் பலன்களும் வேறுபடும். ஆடைகளில் பட்டாடையை ஒருவன் கனவில் கண்டால், கண்டவன் அரசனை ஆட்சியாளனைக் காண நேரிடும். மேலும், ஹராமான வழிகளில் பொருள்களைப் பெறுவான்.

| கனவு | பலன் |
|---|---|
| 153. ஒருவன் ஆட்டின் முடியால் நெய்யப்பட்ட ஆடையை அணிவது போல் கண்டால் | கண்டவன் ஏராளமான பொருள்களையும், ஸாலிஹான உலக வாழ்க்கையையும் அடைவான். |
| 154. ஒட்டகத்தின் முடிகளால் தயாரிக்கப்பட்ட ஆடையையோ, மற்ற முடிகளால் தயாரிக்கப் பட்ட ஆடையையோ, பருத்தி நூலால் தயாரிக்கப்பட்ட ஆடைகளையோ அணிவது போல் கண்டால் | அவை யாவும் ஆட்டின் முடியால் தயாரிக்கப்பட்ட ஆடையை அணிந்திடுவதால் ஏற்படும் நன்மைகளை விடத் தரத்தில் தாழ்ந்தவையேயாகும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 155. பழைய ஆடையை அணிவதைக் கண்டால் | அது தீங்கை அறிவிக்கும். அவன் விரைவில் மரணமாவான். |
| 156. அணிந்துள்ள ஆடையில் அழுக்கைக் கண்டால் | கண்டவன் உலக வாழ்க்கையிலும், தன் மார்க்கத்திலும் நல்லவனாக இருக்க மாட்டான். |
| 157. தன் தலையிலோ, முடியிலோ, உடலிலோ அழுக்கைக் கண்டால் | கண்டவனுக்குக் கவலையும் துக்கமும் ஏற்படும். |
| 158. தம் ஆடை வெண்மை யாகவும், தூய்மையாகவும் இருந்திடக் கண்டால் | இவரின் நிலையும் அழகுடை யதாயிருக்கும். |
| 159. அழுக்கான பழைய ஆடையை அணியக் கண்டால் | கண்டவன் மிடுமையில் உழல்வதுடன், தன் தேவைகள் நிறைவேறுவதில் கடின நிலை ஏற்படும். |
| 160. வெண்மையான நல்லாடை ஒன்றை அணியக் கண்டால் | கண்டவரின் உலகத்துடைய மறுமையுடைய காரியங்கள் கைகூடும். ஒரு கூற்றின்படி அதிகார நிலையும், அழகிய புகழும் கிட்டும். |
| 161. கையில்லாத சட்டை அணியக் கண்டால் | மகிழ்ச்சி உண்டாகும். |
| 162. ஒரு பெண் ஓர் ஆணுடைய ஆடையை அணிவது போல் கண்டால் | கண்டவர், அந்த ஆணுக்கு இணங்கி நடப்பார். |
| 163. ஒருவர் ஒரு பெண்ணுடைய ஆடையை அணியக் கண்டால் | கண்டவருக்குக் கடும் அச்சம் ஏற்படும்; பின்னர் அல்லாஹ்வின் பேருதவியால் அச்சம் நீங்கப் பெறுவார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 164. பல நிறங்கள் உடைய ஆடையை அணிந்திருப்பதாகக் கண்டால் | அவர் தமக்கு விரோதமான பொருத்தமற்ற செய்திகளைக் கேட்க நேரிடும். மனிதர்களுக்கு அறிமுகமானவராகயிருப்பார். |
| 165. வெண்மையான ஆடையை அணியக் கண்டால் | இவரின் செயல்கள் யாவும் திருத்தம் பெறும். |
| 166. மஞ்சள் நிற ஆடை அணிந்திருக்கக் கண்டால் | கண்டவர் நோயுறுவார்; வியாகூலம் ஏற்படும். |
| 167. மஞ்சள் நிறம் தம் ஜுப்பாவிலிருந்தால் | யாதொரு தீங்கும் ஏற்படாது. |
| 168. பச்சை நிறத்தில் ஆடையணிந்திருக்கக் கண்டால் | உயிரோடிருப்பவரின், இறந்து விட்டவரின் கருமங்கள் சீர் பெறும். பச்சை சுவர்க்க வாசிகளின் ஆடையாகும். |
| 169. சிவப்பு ஆடை அணிந்திருக்கக் கண்டால் | மக்களுக்கு மத்தியில் புகழப் பெற்று நிற்பார். |
| 170. கறுப்பு ஆடையை அணிந்திருக்கக் கண்டால் | கண்டவரின் செயல்கள் யாவும் இணக்கமானதாயும், திருத்தமானதாயுமிருக்கும். அதிகாரமும் கிடைக்கப் பெறுவார். வழக்கமாகக் கறுப்பு ஆடைகளை அணிபவருக்கு அவருடைய எல்லாச் செயல்களும் சிறப்படையும். கறுப்பான பொருள்களைக் காண்பது எல்லாவற்றிலும் இணக்கமானதாயும், புகழப்பட்டதாயுமிருக்கும். கருப்புத் திராட்சையைத் தவிர, அதைக் கனவில் காண்பது நலமில்லை. |

## விரிப்பு

| | |
|---|---|
| 171. விரிப்புச் சிறியதாகவும், கெட்டியாகவும் இருப்பதாகக் கண்டால் | அவ்வாறு கண்டவருடைய வாழ்க்கையும் அவ்வாறே அமையும். விரிப்புத் திண்மையாகவும், கெட்டியாகவும் இருக்குமாயின், இவரின் வாழ் நாட்கள் நீண்டதாயும், அது மெல்லியதாகவும், பழுதுபட்டுமிருப்பின் மேற்கண்டவற்றுக்கு மாற்றமாகும். |
| 172. கெட்டியான, அகலமான புதிய விரிப்பைக் கண்டால் | நீண்ட வாழ்க்கையையும், விஸ்தீரணமான ரிஸ்க்கையும், மணமான ஹயாத்தையும், ஸாலிஹான உலகையும் பெற்றுக் கொள்வார். |
| 173. மெல்லிய, பழைய சிறியதொரு விரிப்பைக் கண்டால் | இவனுக்கு நன்மையில்லை. இது போன்றே விரிப்புச் சுருட்டப்பட்டிருக்கக் கண்டிருந்தாலும். |
| 174. கர்ச்சீப்பையோ, தாலியையோ, தலையணையையோ பார்த்தால் | கண்டவனின் பணியாளும், அடிமைகளும், வெள்ளாட்டியுமாவார்கள். இவற்றில் ஏதேனும் நலவோ, தீங்கோ காணப்படின் அவை இவனிலும் பிரதிபலிக்கும். |
| 175. படுதாவைக் கண்டால் | படுதா (திரை) புதியதாகவோ, பழையதாகவோ, சிறிதாகவோ, பெரிதாகவோ இருந்தாலும் அது கவலையையும், வியாகூலத்தையும் ஏற்படுத்தும். திரையைப் பார்ப்பது நல்லதல்ல. |

## 10. அணிகலன் (நகை)களைக் காண்பதன் விளக்கம்

இதன் இனங்கள் வேறுபடுவதைக் கொண்டு இவற்றுக்குரிய பலன்களும் வேறுபடும்.

| கனவு | பலன் |
| --- | --- |
| **முத்து** | |
| 176. முத்து எடுப்பதாகப் பார்த்தால் | ஒரு பெண்ணையோ, அடிமைப் பெண்ணையோ, ஓர் ஆணையோ பெற்றுக் கொள்வார். |
| 177. மாணிக்கம், பச்சை மரகதம் போன்றவற்றை பார்த்தால் | ஒரு பெண்ணையோ, அடிமைப் பெண்ணையோ, ஓர் ஆணையோ அடையப் பெறுவார். |
| 178. தம் கழுத்தில் முத்து மாலை இருப்பது போல் பார்த்தால் | அல்லாஹ்வின் கலாமாகிய குர்ஆனை மனனம் செய்வார். அமானத்தைப் பாதுகாப்பார். பேணுதலுடன் இருப்பதுடன், மனிதர்களுக்குத் தலைமையும் ஏற்பார். |
| 179. மாலையைக் கழுத்தில் அணிய முடியாதவனாக ஆகிவிட்டால் | இவனால் 'இல்மை' அடைய முடியாத நிலை ஏற்படுவதுடன், நல்ல அமல்கள் செய்ய இயலாமலும் ஆகிட நேரிடும். |
| 180. ஒருவர் தம் வாயிலிருந்து முத்துக்கள் உதிர்வதுபோல் பார்த்தால் | அவருடைய வாயில் இருந்து நன்றியான சொற்களும், அறிவார்ந்த சொற்களும் வெளிப்படும். குர்ஆன், தஸ்பீஹ்களை அதிகமாக ஓதுவார். |

### கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 181. முத்துக்களை எண்ணுவது போன்றோ, அவற்றைத் தம்வாயில் போடுவது போன்றோ பார்த்தாராயின் | அல்லாஹ்வின் கலாமை, இல்மை, மறைத்துவிடுவார். மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுக்கமாட்டார். சில பொழுது இல்மைக் கற்றுப் பயன் பெறுபவராயிருப்பார். |
| 182. முத்துக்கள் பாதையோரங்களில், குப்பை மேட்டில், கடைகளில் உதிர்ந்து கிடப்பதாகப் பார்த்தால் | அவ்வாறு கண்டவர் தாம் கற்ற கல்வியை, ஹிக்மத்துகளைத் தகுதியில்லாதவனுக்குக் கற்றுக் கொடுப்பார். |
| 183. பொன்னால், வெள்ளியினால் உண்டான தாலியைப் பார்த்தால் | நம்பிக்கைக்குரியவராகயிருப்பார். |
| 184. கோர்க்கப்பட்ட மணியைப் பார்த்தால் | பொருள் கிடைக்கும். சில சமயம் குர்ஆன் அல்லது பயனளிக்காத இல்மைப் பெறுவார். சிறிதளவு மணியைக் கண்டால் பெண்ணும், அதிகமானதைக் கண்டால் பணியாளும் கிடைக்கப் பெறுவார். |
| 185. வழக்கமாக ஆண்கள் அணிந்திடும் நகைகளைப் பார்த்தால் | அவருக்கும் அழகும் அலங்காரமும் உண்டாகும்; தகுதியும், சிறப்பும் உயரும். |
| 186. அரைஞாண் அணிவது போல் பார்த்தால் | பொருளையும், சிறப்பையும் பெற்றுக் கொள்வார். மக்களிடமும் சிறப்புடன் இருப்பார். சில சமயம், இவர் தம் வாழ்க்கையின் நடுப்பகுதியில் பிறருக்கு உதவியாளராக இருப்பார். |

| | |
|---|---|
| | பெரும் பொருளைப் பெற்றுக் கொள்வார். அல்லது அவருக்கு ஸாலிஹான குழந்தைப் பிறக்கும். தம் இடுப்பில் அரை ஞாண் கயிறுகள் மிகுதியாக இருப் பதாகக் கண்டால், மிகவும் வலுவுற்றவராயும், நேர்மையா னவராயும், அழகானவராயு மிருப்பார். |
| 187. கிரீடத்தை பார்த்தால் | கண்டவர் ஆட்சியையும், சிறப்பையும், உலக வாழ்க்கையில் மேல் நிலையையும் பெற்றுக் கொள்வார். |
| 188. ஒரு பெண் தன்மீது பொன்னாலோ, வெள்ளி யினாலோ, இரத்தினங்களிலோ ஆன கிரீடத்தைப் பார்த்தால் | அது அவளின் கணவராகும். அவளுக்குக் கணவர் இல்லா திருப்பின் அவள் ஓர் அரபிய ரையோ, அரபியல்லாதவரையோ மணப்பாள். அவர் சிறப்பு மிக்கவராயும், கண்ணியம் பெற்றவராயுமிருப்பார். |

## மோதிரம்

| | |
|---|---|
| 189. தம் கையிலுள்ள மோதிரம் கழன்று விட்டதாகப் பார்த்தால் | தம் உரிமைப் பொருள் அவரை விட்டும் நீங்கி விடும். |
| 190.மோதிரத்தைப் பார்த்தால் | கண்டவருக்கு ஆண் குழந்தைப் பிறக்கும். பொருளும் செல்வமும் கிடைக்கப் பெறும். |
| 191. ஓர் அரசன் மோதி ரத்தைப் பார்த்தால் | அவர் தம் ஆட்சியின் மூலம் அவர் நாடியதை அடையப் பெறுவார். உறவினர்களை தமக்குத் தகுதியுள்ளவர்களாக ஆக்கிக் கொள்வார். இவ்வாறே |

| | |
|---|---|
| | மற்ற மனிதர்களும் தங்கள் தங்கள் வாழ்க்கையில் நாடியவற்றை உடைமையாக்கிக் கொள்வார்கள். |
| 192. மோதிரம் களவு போய் விட்டதாகவோ, காணாமற் போய் விட்டதாகவோ கண்டால் | கண்டவனின் தொழிலில் ஏதேனும் இடையூறு ஏற்படும். அல்லது கவலை பீடிக்கும். |
| 193. மோதிரம் உடைந்திடக் கண்டால் | அவனின் உடைமை யாவும் போய்விடும். |
| 194. மோதிரக்கல் விழுவ தாகக் கண்டால் | அரசாங்கத்தில் குழப்பம் ஏற்படும். ஓரளவு சேதம் உண்டாகும். |
| 195. மோதிரம் தங்கத்தால் ஆனதாகக் கண்டால் | அவனின் பொருள் ஹராமாகும். |
| 196. மோதிரம் இரும்பால் ஆனதாகக் கண்டால் | அரசனின் புறத்தால் சிலவற்றை தமக்கு உரிமையாக்கிக் கொள்வர். |
| 197. மோதிரம் பித்தளை யினால், செம்பினால் உண்டா யிருந்தால் | இவனின் உடைமைகள் யாவும் பாழானதாகிவிடும். |
| 198. தன் காலில் ஒற்றை சலங்கையோ, இரட்டைச் சலங்கையோ இருப்பதாகக் கண்டால் | கவலையும், அச்சமும் உண்டாவதுடன் சிறை செல்லவும் நேரிடும். |
| 199. காலில் கடயம் அணிந்திருக்கக் கண்டால் | தம் சகோதரர் அல்லது நண்பர் மூலம் இடர்பட நேரிடும். |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 200. கடயம் வெள்ளியால் இருந்தால் | இடர்பாடுகள் நீங்கி, மகிழ்ச்சி யுண்டாகும். |
| 201. ஒரு பெண் நகை அணிந்திருப்பதைப் பார்ப் பாளாயின் | அவளுக்கு அழகும், அலங்காரமும் உண்டாகும். அவளின் நிலையும் அழகாகும். பொன்னால், வெள்ளியினால், இரத்தினங்களால் நகை அணிந்திருப்பதாகக் கண்டிடினும் சரியே! |
| 202. ஒற்றைச் சலங்கை யையோ, இரட்டைச் சலங் கையோ அவள் பார்த்தால் | அவளின் கணவனுக்கோ, அவளின் சகோதரனுக்கோ மேற்கூறியவை நிகழும். |
| **தங்கக் காசு** | |
| 203. தங்கக் காசுகளையோ, அவை ஒன்றுக்கு மேல் நான்கு காசுகளையோ இருப்பது போல் பார்த்தால் | அவற்றின் எண்ணிக்கைப் படி குழந்தைகள் பிறக்கும். |
| 204. தங்கக் காசில் அச்சில்லாமல் இருப்பதைப் பார்த்தால் | பிள்ளை பிறக்கும். |
| 205. பொன்னையோ, கட்டித் தங்கத்தையோ, பாத்திரத் தையோ பார்த்தால் | இவரின் செல்வங்கள் அழிந்து போகும். அல்லது இவர் மீது அரசர் சினங் கொள்வார். |
| **வெள்ளிக்காசு** | |
| 206. வெள்ளிக் காசைத் தூக்கத்தில் எடுப்பது போல் பார்த்தால் | அதை விழிப்பில் பெற்றுக் கொள்வார். |
| 207. மனிதர்களில் சிலர் தங்கள் கனவில் வெள்ளிக் காசைக் கண்டால் அல்லது எடுப்பது போல் பார்த்தால் | நல் உணவையும், அழகிய பேச்சையும் கிடைக்கப் பெறுவர். சில பொழுது அழகிய பேச்சுகளைப் பேசுவர். |

| கனவின் | விளக்கம் |
| --- | --- |
| 208. செம்பு, பித்தளைக் கலந்த வெள்ளிக் காசுகளைக் கண்டால் | வீண்பேச்சும், வழக்கும் உண்டாகும். |
| 209. வெள்ளிக் காசை ஒரு பையில் வைத்து தம்மிடம் கொடுப்பதாகக் கண்டால் | இவரிடம் கமுக்கமாகக் கொடுக்கப்பட்டதைக் பேணிக் காப்பார். |
| 210. ஒரு வெள்ளிக் காசைக் கண்டால் | இவருக்குக் குழந்தைப் பிறக்கும். |
| 211. வெள்ளிக் கட்டியைக் கண்டால் | நலவைக் கொடுக்கும். அது பொன் கட்டியைக் காண்பதைவிடச் சிறந்தது. |
| 212. ஒருவன் பொன்னை, வெள்ளியை அல்லது இரும்பை உருக்கப் பார்த்தால் | மனிதர்கள் இவனைப் புறம் பேசுவார்கள். |

## 11. ஆயுதங்கள் ஆயுதபாணிகளைக் கனவில் காணல்

| கனவு | பலன் |
| --- | --- |
| 213. ஒருவரை வெட்டுவது போல் கண்டால் | இவர் அவரைக் குறித்து வீண் பேச்சுகள் பேசுவார். |
| 214. மற்றொருவர் மீது அம்பால் எறிவதுபோல் கண்டால் | இவரின் வார்த்தைகள் எடுபடும் நிலையுண்டாகும். |
| 215. ஒருவரை ஒரு வளையத்தால் தாம் குத்துவது போல் கண்டால் | குத்தப்பட்டவர் உதவி பெற்றுக் கொள்வார். |
| 216. தண்டாயுதத்தால் ஒருவனை அடிப்பது போல் பார்த்தால் | அடிபட்டவனுக்கு முஸீபத்துகள் சூழும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 217. அவனைக் காயப் படுத்தியதாகக் கண்டால் | காயப்பட்டவனின் மூலம் தொல்லையும், மானபங்கமும் இவனுக்கு உண்டாகும். |
| 218. தலையை, கையை, காலை அல்லது சதையை வெட்டக் கண்டால் | வெட்டியவனுக்கும், வெட்டப்பட்டவனுக்கும் இடையே பிணக்குகள் உண்டாகும். |
| 219. தம்மிடம் உருவிய வாள் கொடுக்கப்பட்டு அதனைத் தலைக்கு மேல் உயர்த்திப் பிடித்திருக்க அதைக் கொண்டு யாரையும் வெட்டா திருப்பது போல் பார்த்தால் | கண்டவர் சிறப்பான ஒளிமிகு அதிகாரத்தை அடையப் பெறுவார். அல்லது அவருக்கு அழகான பெண் குழந்தைப் பிறக்கும். |

கிர்மானி (ரஹ்) கூறுகின்றார்கள்: ஒருவர் வாளை இவ்விதமாகக் கண்டால் கண்டவருக்குக் குழந்தைப் பிறக்கும். அல்லது சகோதரர் பிறப்பார். இவர் கையில் வாளைக் கொடுக்கப்பட்டு, அந்த வாள் அதன் உறையில் உடைந்திருக்கக் கண்டால், இவர் தாயின் வயிற்றிலிருக்கும் பிள்ளை இறந்து போகும். உறை ஒடிந்திருந்து, வாள் நல்ல நிலையில் இருப்பின், குழந்தை நலமாகப் பிறந்து, தாய் இறந்துவிட நேரிடும்.

வாளின் பிடி ஒடிந்திருக்கக் கண்டால், கனவு கண்டவரின் தந்தையோ, சிறிய தந்தையோ, பெரிய தந்தையோ, இவர்கள் போன்றவர்கள் இறந்து போவார்கள்.

இவ்வாறே, வாளின் பிடி நல்ல நிலையிலோ, ஒடிந்தோ இருப்பது போல் கண்டால் இவரைச் சேர்ந்தவர்களிலும் அதேபோல் நிகழும்.

இமாம் ஜஃபருஸ் ஸாதிக் (ரஹ்) கூறுகின்றார்கள்: ஒருவர் கனவில் உருவிய வாளுடன் இருப்பது போல் கண்டால் அவர் மனிதர்களை ஏசுவார். வாளால் வெட்டி இரத்தம் ஓடுவதாகக் கண்டால், அவர் பாவம் செய்பவராவார். அல்லது அல்லாஹ் இதன் காரணமாக அவருக்கு நற்கூலி கொடுக்கக்கூடும். அதாவது இரத்தம் சிந்தப்பட்ட அளவிற்கு!
வில்

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 220. வில் எறிவது போல் பார்த்தால் | இவர் ஆட்சி அதிகாரத்தில் அதை எறிந்த தொலைவின் அளவின்படி முஸீபத்து பீடிக்கும். இன்னொரு கூற்றின்படி கண்டவர் பயணம் போவார். மீண்டும் வருகையில் நல்லவராகத் திரும்புவார். |
| 221. அந்த வில்லிலுள்ள நாண் தரிப்பட்டிருப்பதாகவோ அல்லது தரிப்பட்டிருந்தாலோ | கண்டவர் பயணம் சென்ற இடத்தில் தங்கியிருப்பார். ஒரு வேளை இவர் பயணம் நிரப்பமாகும். |
| 222. அம்பை எறியக் கண்டால் | உண்மை பேசுவார். |
| 223. தொப்பி கொடி போன்றவற்றைப் பார்த்தால் | பயங்கரத்தை விட்டும் பாதுகாப்பும், அதிகாரமும், அச்சமற்ற நிலையும், உலகில் ஆற்றலும், மேன்மையும் கிடைக்கப் பெறுவார். |
| 224. சாட்டையைக் கண்டால் | சதகா செய்வதைக் குறிக்கும்.அல்லது சிறிதளவு செல்வம் கிடைப்பதைக் குறிக்கும். |

## 12. பண்ட பாத்திரங்களைக் கனவில் காணுதல்

| கனவு | பலன் |
|---|---|
| 225. அடுப்பு, செம்புச்சட்டி, சுஃப்ரா, விளக்கு போன்றவற்றைக் கண்டால் | வீட்டின் தலைவருக்குக் கவலையும், துக்கமும் உண்டாகும். செம்பு, ஈயம் முதலிய தட்டுகள், கரண்டி போன்றவற்றைக் கண்டால், |

பணியாள், அடிமைகளுக்குக் கவலை உண்டாகும்.

## கண்ணாடி

226. கண்ணாடி பார்க்கக் கண்டால்

இவனின் மனைவி கருவுற்றிருந்தால் அவள் இவனைப் போல் ஆண்குழந்தைப் பெற்றெடுப்பாள். இவனின் மனைவி கருவுற்றிருக்காமல், தனக்குப் பிள்ளையும் இல்லாதிருக்குமாயின், இவன் வேலையை விட்டும் நீங்கி, அதிகாரத்தையும் இழந்து, இவனுக்குப் பதிலாக வேறொருவன் நியமிக்கப்படுவான்.

227. கண்டவள் பெண்ணாகயிருந்தால்

கனவில் கண்ணாடியைக் கண்டவள் கருவுற்றிருந்தால் தன்னைப் போல் பெண் குழந்தையைப் பெற்றெடுப்பாள். அவள் கருவுற்றிராமல் இருப்பாளாயின், அவளின் கணவன் இவளைப் போன்ற ஒருத்தியைத் திருமணம் செய்வான். சிறுவனோ, சிறுமியோ கண்ணாடியை கண்டால், அவனைப் போல் அவனுக்குத் தம்பி பிறப்பான். சிறுமியின் தாய் பெண் குழந்தைப்பெற்றெடுப்பாள்.

## ஊசி

228. ஊசியைப் பார்த்தால்

மனைவி அவருக்குக் கட்டுப்பட்டு நடப்பாள்.

229. ஊசி கொண்டு மற்றவர் துணிகளைத் தைப்பதாகப் பார்த்தால்

மக்களுக்கு அறிவுரைக் கூறுவார். மேலும் இவரின் காரியங்கள் கை கூடிட காரணமாக அக்கனவு அமையும்.

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 230. தம் துணியை, மற்றவர் துணியைத் தைக்கக் கண்டால் அல்லது ஊசியில் நூல் இருக்கக் கண்டால் | இவரின் காரியங்கள் நேர்பட்டுவிடும். |
| 231. தம் மனைவியின் துணியைத் தைக்கக் கண்டால் | இவருக்கு நன்மை இல்லை. ஊசி உடைந்திடக் கண்டால் இவர் வறுமையுற்று தலை விரிகோலம் கொண்டிடுவார். |
| **சீப்பு** | |
| 232. சீப்பைப் பார்த்தால் | மகிழ்ச்சியுண்டாகும். |
| 233. தம் தலையை, தாடியை வாரக் கண்டால் | அவரை விட்டும் கவலையும் துக்கமும் விரைவில் நீங்கிப் போகும். இன்னொரு கூற்றின்படி, அதிகமான நன்மையின் பால் அறிவிக்கும். அது இல்மாகவும் இருக்கும். மேலும், தம் பேச்சால், கட்டளை இடுதலால், மற்ற செயல்களால் பயன்கள் ஏற்படும். |
| **கத்தரிக்கோல்** | |
| 234. கத்தரிக்கோல் தம் கையில் இருப்பதாகக் கண்டால். | கண்டவரின் வாழ்நாட்கள் குறைந்துவிடும். |
| 235. கத்தரியால் உரோமங்களை வெட்டுவதாகக் கண்டால் | பெருத்த செல்வத்தைச் சேர்த்துக் கொள்வார். |
| 236. பளிங்கைப் பார்த்தால் | வீட்டுப் பொருள்கள், பளிங்குப் பாத்திரங்கள், கட்டில்கள் கிடைக்கப் பெறுவார். சில சமயம் அடிமையும் கிடைப்பான். |

*கனவின் விளக்கம்*

ஹிகாயத்: ஒருவர் இமாம் முஹம்மதுப்னு சீரீன் (ரஹ்) அவர்களிடம், "இமாம் அவர்களே! நான் கண்ட கனவில் ஒரு பளிங்குப் பாத்திரம் என் கையில் இருக்கக் கண்டேன். அப்பாத்திரத்தில் தண்ணீரும் இருந்தது. கையிலிருந்த அப்பாத்திரம் தவறி கீழே விழுந்துவிட்டது. அதுவும் என் கையின் ஆற்றலால் அது ஆகாயத்தில் இருந்தது" என்றார்.

இமாம் அவர்கள், "உம்முடைய மனைவி கருவுற்றிருக்கிறாளா?" எனக் கேட்டார்கள். அந்த மனிதர், 'ஆம்' என்றார்.

இமாம் அவர்கள், 'அவள் குழந்தைப் பெற்றதும் இறந்து விடுவாள்' என்றனர். "அல்லாஹ்வின் உதவியால் குழந்தை நீண்ட நாள் வாழும்" என்றனர். அவ்வாறே நடந்தது.

## 13. இறந்தவர்களைக் கனவில் கண்டால்

| கனவு | பலன் |
|---|---|
| 237. தாம் இறந்துவிட்டதாகவும், ஜனாஸா பெட்டியில் சுமந்து செல்லும்பொழுது, மக்கள் அழுது கொண்டும், ஒப்பாரி வைத்துக் கொண்டும் தொடர்வதாகவும் பார்த்தால் | மார்க்கத்தில் குழப்பம் ஏற்படும். கண்டவருக்கு உலகத்தில் சிறப்பும், மேன்மையும் ஏற்படும். தன்னைக் கப்ரில் அடக்கம் செய்யப்படாதிருக்கும் காலம் முழுவதும் மேற்கூறிய நிலை ஏற்படும். மண்ணறையில் தான் அடக்கப்பட்டு விட்டதாகக் கண்டானாயின், அவன் தன்னுடைய தீனுடைய வாழ்க்கையில் நன்மையை எதிர்பார்க்க முடியாது. ஷைத்தான் இவன் மீது ஆதிக்கம் செலுத்தி குழப்பங்கள் ஏற்படும். இந்நிலை இவனின் ஜனாஸாவைத் தொடர்ந்து |

சென்ற மக்களின் எண்ணிக்கைப்படி இருக்கும். இவன் மனிதர்களை எப்பொழுதும் அடக்கி ஆள்வான்.

238. தான் இறந்துவிட்டதாகக் கண்டு தன்னை அடக்கம் செய்யாமலோ, பெட்டியில் வைக்காமலோ, அழுகை, ஓலமிடுதல், குளிப்பாட்டுதல், கஃபனிடுதல், தூக்கிச் செல்லல் போன்றவை இல்லாதிருந்தால்

இவனின் வீட்டில் ஒரு பகுதி இடிந்துவிடும். அல்லது மரம் முறிந்துவிடும். இன்னொரு சொல்லின்படி, அவனின் உடலில் பாதிப்பு ஏற்படும். அவனின் பார்வையும் கெட்டுவிடும்.

239. மரணமாகாமலே தன்னை அடக்கம் செய்யப்படுவதாகக் கண்டால்

சிறை வைக்கப்படுவான். அல்லது இவனுடைய காரியங்கள் கடுமையாகும்.

240. ஒருவர் குழி தோண்டுவதாகப் பார்த்தால்

அந்த இடத்திலோ, அந்த ஊரிலோ வீடு கட்டுவார்.

241. வேறொருவர் இறந்து விடக் கண்டு அவரிடம் இவர் எது குறித்தோ கேட்க அவர் கனவு கண்ட இவருக்குச் செய்திகள் கூறினால்

அவர் கூறிய விஷயங்கள் கூடுதல் குறைவின்றி இருப்பின், இவரின் நிலைகள் அழகானவை என்றும் அறிவித்தால் கனவு கண்டவரின் இவ்வுலக வாழ்க்கை நலவாகவும், மறுமையின் நிலைகளும் அழகானதாகவும் இருக்கும். இறந்து விட்டவர் அறிவிக்கும் செய்திகள் யாவும் உண்மையானவைகளாகவே இருக்கும். காரணம், பொய்யான இவ்வுலக வீட்டைத் துறந்து மெய்யான வீட்டில் இருப்பதால் ஆகும். எனவே, அவர் அறிவிப்பவை பொய்யல்ல!

மய்யித்து

| | |
|---|---|
| 242. ஒருவர் மய்யித்தை அழகான வடிவத்தில், அம்மய்யித்தின் மீது வெண்மையான ஆடை அல்லது பச்சை வண்ணத்தில் போர்த்தப் பட்டிருக்கப் பார்த்தால், அவர் மகிழ்ச்சியாக இருப்பதாகவும் பார்த்தால் | காணப்பட்டவருக்கு மறுமையிலும் நல்லதையே அறிவிக்கும். |
| 243. மய்யித்து தலைவிரி கோலமாகவும், பழைய துணியை அணிந்த நிலையிலும், மகிழ்ச்சியற்றவனாயும், கோபங் கொண்டவனாயும் காணப்படின் | காணப்பட்டவனின் நிலை மறுமையிலும் தீய நிலையையே அறிவிக்கும். காணப்பட்டவன் நோயுற்றவனாகக் காணப்படின், பாவங்களை விட்டும் தடுக்கப்பட்டவனாக இருப்பான். |
| 244. இரண்டு முறை ஒருவர் இறந்து விட்டது போல் பார்த்தால், அவருக்காக மக்கள் சப்தமிட்டு ஒப்பாரி வைக்காமல் அழுதால் | இவர் குடும்பத்தில் ஒருவர் திருமணம் செய்வார். கனவில் காணப்பட்டவர் மகிழ்ச்சியடைவார். |
| 245. மய்யித்திற்காக உரக்க அழுவதாகவோ, ஒப்பாரி வைப்பது போன்றோ பார்த்தால் | காணப்பட்டவரின் வாரிசுகளில், இவர் குடும்பத்தில் ஒருவர் இறந்து போக நேரிடும். |
| 246. கப்ரை தோண்டுவதாக ஒருவர் பார்த்தால் | கண்டவர், மய்யித்தின் குண இயல்புகளில் ஒன்றை தொடர்வார். அவருடைய உலக, தீனுடைய வாழ்க்கை எதையேனுமொன்றைப் பின்பற்றி நடப்பார். ஆனால், கனவில் காணப்பட்ட மய்யித்து தமக்கு அறிமுகமானதாக இருந்தால்தான். மய்யித்து |

அறியப்படாததாக இருப்பின் கண்டவருக்கு இயலாமை ஏற்படும்.

ஹிகாயத்: இமாமுல் அஃளம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்கள் சிறுவராக ஓதிக் கொண்டிருக்கும் பருவத்தில் கனவொன்று கண்டார்கள். அக்கனவில் தாம் நபி (ஸல்) அவர்களின் மண்ணறையை தோண்டுவது போன்று!

அக்கனவு குறித்துத் தம் ஆசிரியரிடம் கூறவே, ஆசிரியர் ''என் அருமைக் குழந்தையே! நீர் கண்ட கனவு உண்மையானதாக இருப்பின் நீர் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குணப்பண்புகளைப் பின்பற்றி நடப்பதுடன், அவர்களின் ஷரீஅத்திலுள்ள ஹதீஸ்களையும், சட்டங்களையும் வெளிப்படுத்துவீர்'' என்று விளக்கம் அளித்தார்கள். அவ்வாறே பிற்காலத்தில் இமாம் அவர்கள் சிறந்து விளங்கியதுடன் அவர்களுக்குப் பல கராமாத்துகளும் நிகழ்ந்தன.

247. மய்யித்துத் தமக்கு எதையும் கொடுப்பதாகப் பார்த்தால் — இவர் எதிர்பாராத இடத்திலிருந்து நலவையும், ரிஸ்க்கையும் பெற்றுக் கொள்வார்.

248. உயிருடன் உள்ளவர் தம் உடையில் ஒன்றை மய்யித்துக்குக் கொடுக்க அது அந்த ஆடையை அணிந்துக் கொள்வது போல் பார்த்தால் — இவர் இறந்த பின் அந்த மய்யித்துடன் இணைந்து கொள்வார்.

249. மய்யித்தைச் சுமப்பது போல் கண்டு, அது ஜனாஸாவின் கோலத்தில் இல்லாதிருந்தால் — ஹராமான பொருளைச் சுமக்க நேரிடும். இன்னொரு சொல்லின் படி கடனில்லாதவனின் செலவை இவர் ஏற்க நேரிடும்.

250. மய்யித்துத் தம் கழுத்தைக் கட்டிக் கொண் — அவர் ஆயுள் நீளும்.

| | |
|---|---|
| டிருப்பதாகவோ, இவருடன் கலந்து உறவாடிடுவதாகவோ அல்லது இவரை வெட்டுவது போல் பார்த்தால் | |
| 251. உயிருடனிருக்கும் ஒருவர், அறிமுகமில்லாத மய்யித்தின் வீட்டில் நுழைவது போல் கண்டால் | கண்டவர் இறந்தபின் அந்த மய்யித்துடன் சேர்ந்து கொள்வார். |
| 252. தம் வீட்டில் நோயாளியோ, மய்யித்தோ நுழைவது போல் கண்டால் | அவரின் நோய் முற்றிவிடும். ஒரு வேளை இறந்தும் போகலாம். |

## 14. மனிதர்களுக்கிடையே சில செயல்களைக் காண்பது

| கனவு | பலன் |
|---|---|
| 253. இறந்து விட்ட பெண்ணை மணம் செய்து கொண்டதாகப் பார்த்தால் | தமக்கு இயலாமையாக இருந்த ஒரு செயலில் வெற்றி கொள்வார். |
| 254. பெண்ணை உடலுறவு கொள்ளாமலோ அல்லது பெண்ணைக் காணாமலோ இருக்கும் நிலையில் தன்னுடைய விந்து வெளியாவது போல் பார்த்தால் | அவன் ஒருவனைக் கொலைச் செய்ய காரணமாவான். |
| 255. ஒருவனுக்கு ஸலாம் கூறினால் | அவரிடம் இவர் பெண் பேசுவார். அந்த மனிதர் தமக்கு, தம் பிள்ளைக்கு அல்லது அவரல்லாதவருக்கு அறிமுகமானவராயிருந்தால் ஸலாமுக்கு பதில் சொல்லாத |

வரையில் பெண் கொடுக்க மாட்டார். சில சமயம் ஸலாமைக் கொண்டு ஆரம்பிப்பவர் மற்றொருவரின் மனைவியை மணமுடிப்பார். அம்மனிதர் அறிமுகமில்லாதவராயிருந்தால் தம் சொந்த ஊரில் திருமணம் செய்வார்.

### உடலுறவு

256. ஒருவர் அறிமுகமில்லாத ஓர் இளைஞனை புணர்வது போல் கண்டால்

கண்டவர் பகைவரை வெல்வார். கனவில் புணரப்பட்டவர் தமக்கு அறிமுகம் உள்ளவராகயிருப்பின் மேலும் இருவருக்கும் பகையேதும் இல்லாதிருப்பின், அந்த இளைஞன் சேர்க்கைச் செய்த மனிதரின் மூலம் நலவைப் பெற்றுக் கொள்வான். அல்லது இவர் பெயர் கொண்டவர் மூலமோ, அவருக்கு உவப்பான மனிதரின் மூலமோ நலவைப் பெற்றுக் கொள்வான்.

### குறிகள்

257. பெண்ணுக்கு ஆண்குறி உண்டாயிருக்கக் கண்டால் அவள் கர்ப்பிணியாகவும் இருந்தால்

காணப்பட்டவன் அவள் வயதில் ஓர் ஆண் பிள்ளையாகும். முகம் அழகாகும். அவன் வீட்டாருக்குத் தலைமை பொறுப்பை ஏற்பான். கனவில் கண்ட பெண் கர்ப்பிணியில்லாதவளாயிருந்து பிள்ளையுடையவளாயிருந்தால், அவள் அதன்பின் குழந்தைகளே பெறமாட்டாள். அவள் பிள்ளைப் பெற்றாலும், அப்பிள்ளைப் பருவம் எய்துமுன் இறந்துவிடும்.

258. ஒரு பெண் தனக்குத்

| | |
|---|---|
| தாடி இருப்பதாகப் பார்த்தால் | அவளின் பேர் புகழ்ப் பெற்று விளங்கும். அதன்மூலம் அவள் சிறப்படைவாள். |
| 259. தமக்கு பெண்குறி இருப்பது போல் ஒருவர் பார்த்தால் | கண்டவருக்கு இழிவு ஏற்படும். |
| 260. அந்தப் பெண் குறியில் 'ஜிமாஉ' செய்வது போல் பார்த்தால், உடலுறவு கொண்ட வரும் அறிமுகமானவரா யிருந்தால் | ஜிமாஉ செய்தவர் இவர் மூலம் தம் தேவைகளைப் பெற்றுக் கொள்வார். அறிமுகமாகாத வராயிருந்தால் தாழ்வுற்று, தூற்றுதல்களுக்கு ஆளாக நேரிடும். |
| 261. ஒருவர் தம் துவாரத்தில் சேர்க்கைச் செய்யப்படுவதாகப் பார்த்தால் | சொத்துக்களை அடையப் பெறுவார். சேர்க்கைச் செய்தவர் அறிமுகமானவராகவோ, அறிமுகம் அற்றவராகவோ இருப்பின், அவரைச் சார்ந்தவர்கள் மூலம் பொருளை இவர் பெற்றுக் கொள்வார். இவரின் வாழ்நாட்கள் நீண்டிருக்கும். |
| 262. தம்மை ஆடு, மாடு, ஒட்டகம் மற்றும் மிருகங்கள் சேர்க்கைச் செய்ததாகக் கண்டால் | அந்த மிருகங்கள் யாருக்கு உரியனவோ அவரின் மூலம் இவர் பொருள் கிடைக்கப் பெறுவார். |
| 263. ஒருவர் தமக்கு மிருகங்களுடைய ஆண்குறி இருப்பதாகக் கண்டால் | அவருக்குப் பிள்ளைகள் அதிகமாகும். |
| 264. தமக்குரிய மிருகத்தைச் சேர்க்கைச் செய்யக் கண்டால் | நன்மை பெறத் தகுதியற்ற வருக்கு நன்மைகளைச் சேர்த்து வைக்க முயலுவார். |
| 265. தமக்குரியதல்லாத | |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| மிருகத்தைப் புணர்வதாகப் பார்த்தால் | கண்டவர் தம் பகைவரை இழிவாக்கி, தூற்றல்களுக்கு ஆளாக்குவதுடன் அவரை வெற்றி பெறுவார். ஒரு பறவையை, ஒரு காட்டு விலங்கைப் புணர்வது போல் கனவில் கண்டாலும் இவ்வாறே நிகழும். |
| 266. தம் மனைவி மாத விடாய்க்காரியாக இருப்பது போல் பார்த்தால் | கண்டவர் வேறொருத்தியைத் திருமணம் செய்ய நேரிடும். |
| 267. தான் 'ஹைளாக' இருப்பது போல் பார்த்தால் | கண்டவன் ஹராமானதைச் செய்வான். |
| 267a. தான், 'ஜுனுபாளி' யாக இருப்பது போல் கண்டால் | அவன் செயல்கள் களங்கம் பெற்றுவிடும். |

விந்து இறங்குவது போல் காணப்படும் கனவுகளுக்குப் பலன்கள் இல்லை. விந்து இறங்கினால் குளிப்பு கடமையாகும். இக்கனவுகள் ஷைத்தானின் விளையாட்டாகும்.

ஹிகாயத் : ஒரு மனிதர் இமாம் முஹம்மது சீரீன் (ரஹ்) அவர்களிடம் வந்து, "பெரியார் அவர்களே! நான் கனவொன்று கண்டேன்; அக்கனவு கண்டதிலிருந்து கவலையாக இருக்கின்றேன். அது பற்றி தங்களிடம் கூறிடவும் நாணமுறுகின்றேன்" என்றார்.

அப்பொழுது இமாம் அவர்கள, "அதுபற்றித் தாளில் எழுதிக் கொடும்" என்றார்கள். அவர் தாளில் எழுதினார். அதில், "இமாம் அவர்களே! நான் ஊரை விட்டுப் புறப்பட்டுச் சென்று மற்றோர் ஊரில் மூன்று மாதங்கள் தங்கியிருந்தேன். அப்பொழுது கனவில் வாகனத்தில் ஏறி வீட்டிற்கு வருகிறேன். என் மனைவி தூங்கிக் கொண்டிருக்கிறாள். அது சமயம் இரண்டு ஆடுகள் என் மனைவியின் குறியில் பாய்ந்து ஒன்றுக்கொன்று இரத்தம் சிந்தக் கண்டேன். கனவு கண்டதிலிருந்து வெறுத்து விட்டேன். எனினும், அல்லாஹ்வின் மீது ஆணையாக, அவளை மிகவும் உவக்கிறேன்" என்று எழுதியிருந்தார்.

## கனவின் விளக்கம்

அப்பொழுது இமாம் அவர்கள் அந்தத் தாளைப் பார்த்து விட்டுச் சொன்னார்கள், "நீ உன் மனைவியை வெறுக்காதே! அவள் ஸாலிஹான பெண்; பத்தினித்தனம் கொண்ட, தூய்மையான பெண்ணாவாள். நீ ஊருக்கு வந்தபின் அவளை நெருங்கினாயா?" எனக் கேட்டார்கள்.

"அவள் தன் மறைவிடத்திலுள்ள மயிரை களைவதற்கு ஒரு மறைவான இடம் சென்று முடிகளை களைய முயன்றாள். அவளால் களைய முடியவில்லை. முடியைக் களைந்திட கண்ணாம்பு போன்ற பொருளும் கிடைக்கவில்லை.

"நீ அவளிடம் தந்திரமாக நெருங்கி நெருங்கி வருவதை அஞ்சி, கத்தரியை எடுத்து முடியைத் தரித்த பொழுது அவளின் குறியில் காயம் ஏற்பட்டுவிட்டது.

"இந்த உண்மையை நீ அறிய விரும்பினால் இப்பொழுதே அவளிடம் சென்ற காண்பாயாயின் நான் சொன்னது உண்மை என்பதை அறிந்து கொள்வாய்" என்றார்கள்.

அம்மனிதர் தம் மனைவியிடம் சென்று அவளை நெருங்கியபொழுது அவள் இவரை விட்டும் விலகி தூரப் போய்விட்டாள்.

அவள் அவரை நோக்கி, "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் உமக்கு உடன்படமாட்டேன். நீர் ஏழு மாதங்களாக என்னை விட்டுப் பிரிந்திருந்த காரணத்தைக் கூறினால் ஒழிய!" என்றாள்.

அப்பொழுது அவர் தாம் கண்ட கனவையும் இமாம் அவர்கள் கூறிய விளக்கத்தையும் அவளிடம் கூறினார். அவள், "அல்லாஹ்வின் மீது ஆணையாக, இமாம் உண்மையையே கூறினார்கள்" என்றாள்.

கணவன் கையைப் பிடித்துத் தன் மறைவிடத்திலுள்ள காயத்தில் வைத்துக் காண்பித்தாள். காயத்தில் பஞ்சு வைக்கப்பட்டிருப்பதை அறிந்து, அல்லாஹ்விற்கு நன்றி கூறி அவளைப் புகழ்ந்தார்.

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 268. தாம் பிள்ளையுண்டாயிருப்பதாகப் பார்த்தால் | உலக வாழ்க்கையிலும், பொருளாதாரத்திலும் மிகுதியானவற்றை அடையப் பெறுவார். சில சமயம் மனிதர்களால் பயங்கரம் நிகழும். |
| 269. தமக்குப் பெண் குழந்தைப் பிறந்தது போல் கண்டால் | நலவையும், மகிழ்ச்சியையும் பெற்றுக் கொள்வார். ஆண்குழந்தைப் பெற்றதாகக் கண்டால் இவரைத் துக்கமும், வேதனையும் பீடிக்கும். இதுபோன்றே அடிமையை விலைக்கு வாங்கக் கண்டாலும் நலவையும், மகிழ்ச்சியையும் அடையப் பெறுவார். அடிமைப் பயலை வாங்கக் கண்டால் கவலையும், வேதனையும் பீடிக்கும். |
| 270. தன் மனைவி ஆண்குழந்தைப் பெறுவது போல் கண்டால் அல்லது பெண் குழந்தைப் பெறுவது போல் கண்டால் | மேற்கூறப் பெற்றது போன்று ஆண் குழந்தையால் கவலைகள் வியாகூலங்கள் பீடிக்கும். பெண் குழந்தையால் நலவும் மகிழ்ச்சியும் ஏற்படும். இன்னொரு சொல்லின்படி, தன் மனைவி ஆண் குழந்தைப் பெறக் கண்டால், பெண் குழந்தைப் பெறுவாள். பெண் குழந்தைப் பெறக் கண்டால், ஆண் குழந்தைப் பெறுவாள். அதாவது கனவில் காணப்பட்ட தன் மனைவி கருவுற்றிருந்தால்தான் அவ்வாறு நிகழும். |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 271. ஒருவன் பால் கொடுக்க, அல்லது பால் குடிப்பது போல கண்டால் | கண்டவனைச் சிறையில் தள்ளப்படும். அவனுக்கு ரஹ்மத்தின் வாசல் அடைக்கப்பட்டுவிடும். |

## 15. மனித-விலங்குகளின் உறுப்புக்களைக் காணுதல்

| கனவு | பலன் |
|---|---|
| 272. அறிமுகமில்லாதவரை இளைஞராகக் கண்டால் | காணப்பட்டவர் பகைவர் ஆவார். |
| 273. அவர் கிழவராக இருக்கக் கண்டால் | அவ்வாறு காணப்பட்டது அவரின் நல்ல பொருளும் நற்பேறுமாகும். மேலும் தாம் முயன்று பெற்ற செல்வமாகும். |
| 274. கனவில் பார்த்த கிழவர் இவருக்கு ஏதேனுமொரு பொருளைக் கொடுப்பதாகவோ இவருடன் பேசுவது போன்றோ பார்த்தால் | அவ்வாறு பார்த்தது அவர் முயற்சி செய்து பெற்ற பொருளும் நற்பேறுமாகும். இவையாவும் கனவில் பார்த்த கிழவரின் நிலைகளைப் பொருத்து அமையும். |
| 275. அறிமுகமில்லாத கிழவியைக் கண்டால் | அவள் எந்நிலையில் இருந்தாளோ அவ்வாறே பலன்கள் அமையும். |
| 276. அறிமுகமில்லாத சிறுமி ஒருவருடன் விளையாடிட, பேசிட அல்லது ஒரு பொருளை கொடுக்கக் கண்டால் அல்லது அவளின் கழுத்தைக் கட்டிக் கொண் டிருப்பது போன்றோ, முத்த மிட்டதாகவோ, அவளை ஜிமாஉ செய்து விந்து | அச்சிறுமி இருந்த அழகின் படியும், நிலையின் படியும், இவர் வாழும் காலத்தில் நலவும், அழகான ரிஸ்கும் கிடைக்கப் பெறுவார். இவற்றுக்கு மாற்றமாக அச்சிறுமியின் நிலை பேதகமாகி இருந்தால் கண்டவரின் நிலை பேதமாகி விடும். |

| | |
|---|---|
| வெளியாகமலோ இருக்கக் கண்டாராயின் | |
| 277. அடிமையைப் பார்த்தால் | பார்த்தவருக்கு கவலையும், சலிப்பும், பெருத்த செலவும் ஏற்படும். அல்லது அவருக்கு ஆண் குழந்தை பிறக்கும். |
| 278. முன்பின் அறிமுகமில்லாத ஆண்களைக் கண்டால் | காணப்பட்டவர்கள் வானவர்கள் ஆவார்கள். |

## தலை

| | |
|---|---|
| 279. தலையை மட்டும் கண்டால் | கண்டவர் தலைமைப் பதவியோ, தந்தை, சகோதரன் அல்லது வீட்டுத் தலைவர், கணவன், அதிகாரம் செலுத்தும் உரிமையாளர் இவர்களின் நிலையினை அடையப் பெறுவார். |
| 280. தலையில் அழுக்கோ, கெட்ட பொருளோ இருக்கப் பார்த்தால் | தலைமைக்காரர்களிடம் அது நிகழும். |
| 281. தலையைக் கண்டால் | இன்னொரு கூற்றின்படி பையிலுள்ள பொருள் என்றும் கூறப்படும். |
| 282. கழுத்து அறுபடாமல் தலை மட்டும் கழுத்திலிருந்து பிரிந்து விட்டதாகப் பார்த்தால் | கண்டவர் தலைமையைப் பிரிய நேரிடும் அல்லது கைப் பொருளை இழந்து விடுவார். அல்லது அவர் வாழ்க்கை நெருக்கடிக்குள்ளாகும். |

## தலைமுடி

| | |
|---|---|
| 283. தலைமுடியைக் கண்டால் | அது ஒருவரின் பொருளாகும். அல்லது தலைமையில் உள்ளவரின் பொருள் என்பதாகும் |
| 284. ஹஜ்ஜுடைய நாட்களிலோ, கண்ணியமிக்க மாதங்களிலோ தம்முடைய தலைமுடி இறக்கக் கண்டால் | தம்முடைய செல்வமோ தலைமையில் உள்ளவரின் செல்வமோ போய்விடும். அல்லது அவருடைய வேலை போய்விடும் |
| 285. தலைமுடியிறக்கக் கண்டது ஹஜ்ஜுடைய மாதமாக இருந்தால் | சாதகமானதாகும். ஹஜ்ஜும் செய்வார். |
| 286. தலைமுடி நீண்டிருக்கக் கண்டால் | கண்டவர் படைவீரராக இருப்பின், அழகும், ஆற்றலும், எல்லோரும் அவரைக் கண்டு அஞ்சும் நிலையும் ஏற்படும். அவ்வாறு முடி நீண்டிருப்பதாகக் கண்டவர் ஹாஷிமீ கிளையிலுள்ளவராகயிருந்தால் மனிதர்களை விலக்குவார். |
| 287. பார்த்தவர் வியாபாரியாக இருந்தால் | அவரின் பொருள் பெருகும். |
| 288. தம் முடி நீண்டிருப்பதாக ஓர் உழவர் கண்டால் | அவருடைய வேளாண்மை செழித்து வளரும். மேற்கூறியவாறு முடி நீண்டும், விஸ்தீரணமாகவும் இருந்திடும் அளவின் படி கவலையும், வியாகூலமும் பீடிக்கும். |
| 289. தன் முகத்தில் முடிவிழக் கண்டால் | கவலையும் - துக்கமும் அதிகமாகும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 290. தம்முடைய முடி கறுப்பாக இருக்க கனவில் வெண்மையாகக் காணப்பட்டால் | மக்கள் அவருக்கு மரியாதை செய்வதுடன், அஞ்சவும் செய்வார்கள். |
| 291. தன் முடி வெள்ளையாக இருக்கும் நிலையில், கனவில் கறுப்பாகக் காணப்பட்டால் | கண்டவனின் நிலை பேதகமாகும். |
| 292. தம்முடைய தாடி நீண்டிருப்பதாகக் காணப்பட்டால் | அவரின் தலைமை நீடிக்கும். |
| 293. தம்முடைய தாடியை பிறர் சிரைப்பதாகக் கண்டால் | அவருடைய தலைமைப் போய் விடும். அது போன்றே தாடி முடி விழக் கண்டாலும் பிடுங்கக் கண்டாலும் சரி! |
| 294. தலைமுடி தாடியின் உரோமம் இரண்டையும் சேர்த்துச் சிரைக்கவோ பிடுங்கவோ பார்த்தால் | அது, நலவின் மீது அறிவிக்குமாயின் அவர் துன்பத்திற்குள்ளானவராகயிருந்தால் அல்லாஹ் அவர் துன்பத்தை நீக்குவான். கடன்பட்டவராகயிருந்தால் அல்லாஹு தஆலா அவரின் கடனைத் தீர்ப்பான். அவர் உடல் நலம் குறைந்தவராகயிருந்தால் நலமாக்கி வைப்பான். இவையன்றி அவர் வேறு நிலை பெற்றவராகயிருந்து அக்கனவைக் கண்டால் நல்லதல்ல. |
| 295. தலையிலும், தாடியிலும், மேனியிலும் எண்ணெய் | பார்த்தவருக்கு அழகும் அலங்காரமும் ஏற்படும். |

| | |
|---|---|
| வழியும் அளவிற்குத் தேய்ப்பதாகப் பார்த்தால் | |
| 296. வழக்கத்திற்கு மாற்றமாக எண்ணெய் முகத்திலும் துணியிலும் ஓடுவது போல் பார்ப்பின் | கவலை உண்டாகும். |
| 297. எண்ணெய் தேய்க்கும் பொழுது எண்ணெயில் நல்ல மணம் உண்டாகி இருப்பின் | அழகுடன் பேரழகான நல்ல பொருள் கிடைக்கும். |
| 298. முகத்திலும், உள்ளங்கையிலும், வழக்கமாக முடி முளைக்காத பகுதிகளிலும் முடி முளைத்திருப்பதாகக் கண்டால் | கடன் மிகுதியாகும். கடுமையான கஷ்டம் அவரைத் தொடரும். |
| 299. மற்ற உறுப்புகளிலுள்ள உரோமங்கள் அதிகமாகவோ, குறைந்ததாகவோ பார்த்தால் | அதிகரித்து இருப்பதாகக் கண்டவருக்குப் பொருள் இருந்தால், அவர் வியாபாரம் செய்பவராகயிருந்தால், விவசாயம் செய்பவராகயிருந்தால் இவற்றில் எல்லாம் பெருக்கம் (பரக்கத்) உண்டாகும். அதாவது உரோமங்கள் அதிகமாகக் காணப்பட்ட அளவிற்கு மேற்சொன்னவற்றில் கூடுதல் ஏற்படும். குறைந்திருப்பதாகக் கண்டால் அதற்கு தக்கவாறு மேற்சொன்னவற்றில் குறைவுஏற்படும். |
| 300. சிறுநீர், மலம் முதலியவற்றைக் கண்டு, கண்டவர் துன்பத்திற்கு ஆளானவராகயிருந்தால் | அல்லாஹு தஆலா அவரின் துன்பங்களை நீக்குவான். கடனாளியாகயிருந்தால் கடனை அடைத்துவிடுவான். பொருளுடையவராகயிருந்தால் |

| | |
|---|---|
| | அது குறைந்துவிடும். சிறுநீர் அதிகமாய்ப் பெய்யக் கண்டால் அவரின் பொருள் மிகுதியாகக் குறையும். குறைவாகப் பெய்வது போல் கண்டால் பொருளும் குறைவாக எடுபடும். |
| 301. மனித மூளையையோ, மனிதனல்லாததின் மூளையையோ தின்பதாகக் கண்டால் | கண்டவர் தம்முடைய ஹலாலான பொருளைக் கொண்டே உண்பார். |
| 302. மனிதனின் மாமிசத்தைச் சமைத்துத் தின்னக் கண்டாலோ, சுட்டுத் தின்பது போல் கண்டாலோ | அவ்வாறு கண்டவருக்குப் பொருள் கிடைக்கும். பச்சை மாமிசத்தைத் தின்னக் கண்டால், பிற மனிதர்களை இவர் புறம்பேசுவர். |
| 303. தம்முடைய மனைவி, மகள் இறந்து விட்டதாகக் கண்டால் | மனைவிக்கு மணவிலக்கு அளிப்பார். அல்லது இறந்து போவார். |
| 304. தம்முடைய மகளை மணமுடித்துக் கொடுப்பதாக அல்லது தம்முடைய காது அதிகமிருப்பதாகவோ, அதில் நகைகள் இரத்தினங்களைக் கொண்டு அணிவிக்கப் பட்டிருப்பதாகக் கண்டால் | அவருடைய மனைவி அல்லது மகளின் நிலைகள் அழகாகும். |
| 305. தம் கண் அதிகமாக இருப்பது போன்றோ, பார்வை அதிக ஒளியுடன் இருப்பது போன்றோ அல்லது கண் குறைந்திருப்பதாகவோ, பார்வை மங்கியுள்ளதாவோ கண்டால் | கண்டவர் தீனில் நிலைத் திருப்பார். இவ்வாறே குருடரும், கண்வலிக்காரரும், மாலைக் கண்ணனும் காணும் கனவுகளுமாகும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 306. கண்ணில் சுருமா இடுவது போல் தெரிந்தால் | தம்மார்க்கத்தை இணக்கமாக்கி வைப்பார். சுர்மாவை அழகிற்காக இடுவதை எண்ணங் கொண்டிருந்தால் மார்க்க விஷயங்களில் மற்றவர்களை விட அழகான நற்செயல்களை ஆற்றுபவராக இருப்பார். சிலசமயம் கனவில் தம்கண்ணைக் காண்பது பணம் கிடைப்பதைக் குறிக்கும். மேலும் அவர் தம் ' பிள்ளைகளிடமும், அரசர்களிடமும் சேர்ந்திருப்பதையும் குறிக்கும். |
| 307. கண்ணை, இமைகளை, புருவங்களை மிகுதியாக இருப்பது போலோ அல்லது குறைவாகவும், அழகான தாகவும் இருப்பது போலோ பார்த்தால் | அவரின் கோலம் அழகு பெற்றதாயும் தம் மார்க்கத்தில் தம்முடைய நிலை அழகு பெற்றதாயும் இருந்திடக் காண்பார். |
| 308. மூக்கையும் நெற்றியையும் கண்டால் | கண்டவருக்கு சிறப்பும் பெருமையும்சேரும். |
| 309. தன் மூக்கு அதிகமாகவோ, குறைந்தோ இருப்பதாகப் பார்த்தால் | அவனில் சிறப்பும் பெருமையும் குறைந்து விடும். |
| 310. தன்னிரு உதடுகளைக் கண்டால் | உதவிகள் கிடைக்கும். மேல்உதட்டைக் காண்பதை விடக் கீழ் உதட்டைக் காண்பது சிறப்பு! |

| | |
|---|---|
| **நாக்கு** | |
| 311. தம் நாவைப் பார்த்தால் | அவ்வாறு பார்த்தவர்கள் சொற் பொழிவாளராயும், மக்களுக்கு நன்மைகளை ஏற்றி வைப்பராயும் இருப்பார். மேலும், அந்த நாவே அவருக்கு ஆதாரமாகவும், அத்தாட்சியாகவும் விளங்கும். |
| 312. தம் நாவு வெட்டப்பட்ட தாகவோ, குறைந்திருப் பதாகவோ பார்ப்பின் | தம்வழக்கில் தமக்குஆதாரம் பெற்றுக் கொள்வார். தமக்கு வழக்கு ஏதும் இல்லாவிடில், தம்மார்க்கத்திற்கு இணக்கமா னவராக இருப்பார். |
| 313. நாவு நீண்டிருப்பதாகக் கண்டால் | வழக்கு ஆதாரம் பெற்று வெற்றி பெறுவார். வழக்கு ஏதும் இல்லாதிருப்பின் அவர் வீணான காரியங்களிலும் போதையிலும் இருக்க நேரிடும். |
| 314. ஒரு பெண் தன் நாவு வெட்டப்பட்டதாகக் கண்டால் | அவள் புகழுக்குரியவளாக இருப்பாள். |
| **பற்கள்** | |
| 315. தன் பற்களைக் கனவில் கண்டால் | அவை தம் வீட்டாரையும் விரிப்புகளையும் குறிக்கும். |
| 316. தன் கழுத்து நீளமாகவும் அதிகமாகவும் இருப்பது போல் கண்டால் | அவ்வாறு கண்டவர் அமானிதத்தையும், தீனையும் பொறுப்பேற்றுக் கொள்வார். அது சிறியதாகவோ, குறைந்திருப் பதாகவோ, கட்டையாகவோ இருப்பதுபோல் கண்டால் அமானிதத்தையும் பொறுப் பேற்றிட இயலாமற் போய் விடுவார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 317. தன் கை வெட்டப் பட்டது போல் கண்டு, அவன் அதை எடுத்துக் கொள்ளா விட்டால் | தன் உடன் பிறந்தான், நண்பன் இறந்து விடநேரிடும். அல்லது அவனின் நண்பன் பிரிய நேரிடும். வெட்டப்பட்ட கையை எடுத்துக் கொண்ட தாகக் கண்டால், தன் சகோ தரன், நண்பன், தன்பிள்ளைகள் முதலியவர்களுக்குஉதவிகள் செய்பவனாக இருப்பான். |
| 318. தம் கை வெட்டப்பட்ட தாகவோ, கழுத்துடன் பிணைக்கப்பட்டிருப்பதாகவோ கண்டால் | கண்டவர் ஹராமான செயல்களை விட்டும், பாவங்களை விட்டும் நீங்கி விடுவார் |
| 319. அரசர் ஒருவரின் கையை வெட்டியது போல் கண்டால் | கண்டவன் அல்லாஹ்வின் மீது பொய்ச் சத்தியம்செய்வான். |
| 320. தன் கை நீண்டிருப்பது போல் கண்டால் | அவனின் பொருளாதாரமும், கொடைத் தன்மையும், செலவு செய்தலும் மிகுதியாகும். |
| 321. தன் கை நகங்களைக் கண்டால் | அவனுக்கு சக்தியுண்டாவதுடன், அவனின் நிலையும் அழகானதாக இருக்கும். |
| 322. தன் நெஞ்சைக் கண்டால் | அவனுக்கு அமைதியுண்டாகும். |
| 323. தன் வயிறு சிறிதாக இருக்கக் கண்டால் | அவனின் பொருள் பெருகும். |
| 324. தன் குடலை, ஈரலை, மாங்காயை அல்லது இவை யல்லாத வயிற்றிலுள்ள ஒன்றை அல்லது அப் பொருளை தன் கையால் எடுக்க அல்லது அவனோ, மற்றவனோ அப்பொருளைச் சுமப்பது போல் கண்டால் | புதையல் எடுப்பான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 325. ஒருவர் உடலில் இருந்து, அல்லது ஓர் உறுப்பிலிருந்து பேனோ, புழுவோ உதிர்ந்து விழுவது போலோ அல்லது உடலிலோ, உடையிலோ மிகுதியாகப் பேனோ, புழுக்களோ இருப்பது கண்டால் | பெருஞ்செல்வத்தையும் அடிமைகளையும் பெற்றுக் கொள்வார். |
| 326. தன் ஆண் குறி தரிக்கப்பட்டது போல் கண்டால் | அவன்பிள்ளை இறந்து போகும். அல்லது தானே ஆண் குறி வெட்டப்பட்ட நிலையில் இறந்து போவான். |
| 327. ஒருவனின் இடப்பக்க விதை எடுக்கப்பட்டதாகவோ, விழுந்து விட்டதாகவோ காண்பானாயின் | அவனுக்குப் பிள்ளை பிறக்காது. |
| 328. அவருடைய இரு தொடைகளையும் பார்த்தால் | அவருடைய குடும்பத்தாரையும், கூட்டத்தார்களையும் கண்டு கொள்வார். |
| 329. அவர் தொடை அவரை விட்டும் பிரிந்து விட்டது போல் பார்த்தால் | தம் குடும்பத்தாரையும், கூட்டத்தாரையும் பிரிந்துவிடுவர். |
| 330. ஒருவர் காலையோ, முட்டுக்காலையோ, கெண்டைக் காலையோ பார்த்தால் | பொருளும், நல்வாழ்க்கையும் அதில் பெருக்கமும் உண்டாகும். |
| 331. அவர் கால்விரலைக் கண்டால் | அவர் பொருள் சிறப்புற்று விளங்கும். |
| 332. அவர் தோலைக் கண்டால் | இறக்கும் பொழுது பொருள் வைத்து விட்டுச் செல்வார். |
| 333. தமக்குப் பைத்தியம் பிடித்ததாகக் கண்டால் | செல்வம் கிடைக்கும். எனினும் வீணானவற்றில் அதைச் செலவிடுவார். |

## 16. பால்-மற்றும் குடிப்புகள் பற்றிய கனவுகள்

| கனவு | பலன். |
|---|---|
| 334. பால் இன்னதென அறிய முடியாத பாலாக இருந்தால் | அது இஸ்லாம் என்னும் மார்க்கத்தைக் குறிக்கும். மேலும், நபி (ஸல்) அவர்களின் சுன்னத்துகளையும் குறிக்கும். |
| 335. அந்தப் பாலைக் குடிப்பது போன்றோ, தமக் குரியதாக ஆக்கிக் கொள்வது போன்றோ கண்டால் | அவருடைய மார்க்கமாகிய இஸ்லாத்தில் நலவையும் நல் இணக்கத்தையும் அடையப் பெறுவார். |
| 336. பார்த்தது இன்னபால் என்று அறிய வந்தால் மேலும் அப்பால் புளிக்காமலும், உறைந்து போகாமலும் இருந்தால் | ஹலாலான பொருளும், பயனளிக்கும் ரிஸ்க்கும் கிடைக்கும். |
| 337. அப்பால் புளிப்பாகவோ திரைந்தோ இருக்குமாயின் | கவலையும் சஞ்சலமும் தங்கடமும் ஏற்படும். |
| 338. மாட்டுப்பால், எருமைப்பால், ஒட்டகைப் பால்களைக் காணின் | நலவாகும். வெள்ளாட்டுப் பாலையும் செம்மறியாட்டுப் பாலையும் கனவில் காண்பது மாட்டுப் பாலைக் காண்பதை விடவும் தாழ்ந்த நிலையாகும். |
| 339. கோவேறு கழுதையின் பாலைக் கண்டால் | கண்டவனுக்கு அமளியும் வருத்தமும் உண்டாகும். |
| 340 கழுதைப் பாலைக் கண்டால் | கடும் நோய் ஏற்பட்டு, நலம் பெறுவான். |
| 341. மான் பால், உண்ண ஹலாலான விலங்குகளின் பாலையும் பார்த்தால் | நலவும் நல் இணக்கமும் ஹலாலான உணவும் கிடைக்கப்பெறுவார். |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 342. குதிரைப்பாலைக் கண்டாலோ, குடிப்பது போல் காண நேரிட்டாலோ | கண்டவனுக்கு இணக்கமான நற்பெயர் கிட்டும். |
| 343. புலியின் பாலைக் கண்டால் | பகைவனை வெல்வான். |
| 344. நாய்ப் பால் குடிக்கப் பார்த்தால் | பகைவனால் தீங்கும் தங்கடமும் ஏற்படும். |
| 345. குள்ளநரியின் பாலைக் குடிக்கப் பார்த்தால் | நலவும் மகிழ்ச்சியும் சீமான் தனமும் உண்டாகும். |
| 346. தேன் குடிப்பது போல் பார்த்தால் | பொருளும், நல்ல உணவும் கிடைப்பதுடன், நோய்களை விட்டும் நீங்கப் பெறுவார். |

## 17. மரங்களைக் கனவில் காண்பது

| கனவு | பலன் |
|---|---|
| 347. ஒருவர் ஒருமரத்தை நட்டவுடன் அது தழைத்து வளர்ந்தது போல் கண்டால் | கண்டவர் சிறப்பினைப் பெற்றுக் கொள்வார். அம்மரம் எவ்வாறுள்ளதோ அதன்படியே சிறப்பு அவரைச் சேரும். ஒருக்கால் அக்கனவு குழந்தையைக் குறிக்கும். அக்குழந்தை வயது எய்தும் வரையும், ஒரு மரம் ஆயிரம் திர்ஹம்கள் மதிப்புள்ள அளவிற்கு பரக்கத் தான குழந்தையாகும். |
| 348. மாதுளம் பழம் இனிப்பாக இருப்பது போல் கண்டால் | திரட்டப்பட்ட செல்வத்தைக் குறிக்கும். அதைத் தின்னக் கண்டால் கண்டால் கண்டவனுக்கு நிறைந்த பொருள் கிடைக்கப் பெறும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 349. புளிப்பான மாதுளையைத் தின்னக் கண்டால் | கவலையும், வேதனையும் உண்டாகும். புளித்தப் பழங்கள் அனைத்திற்கும் இதே விளக்கம் தான். |
| 350. வாழைப்பழத்தைப் பார்த்தால் | அதைக் கண்டவனுக்கு பொருள் கிடைக்கும். தீனில் அதிக ஆர்வம் எற்படும். |
| 351. சிவந்த-வெள்ளை முந்திரிப் பழங்களைக் கண்டால் | உலக வாழ்வில் உதவி கிட்டும். அவ்விரண்டையும் காண்பது நலமேயாகும். அதனை எப்பொழுது கண்டால் என்றால் அவை கனி கொடுக்கும் காலத்தில் மட்டுமேயாகும். அதன் பருவக்காலமல்லாதவற்றில் அவற்றைக் கண்டால் நோயைத் தோற்றுவிக்கும். சில பொழுது, பழத்தை எண்ணித் தின்ற கணக்கின்படி சிலபொழுது சவுக்கடி கிடைக்கும். |
| 352. ஒருவர் ஒரு மரத்தைக் கண்டு அதிலுள்ள இலை, பழம் முதலியவற்றிலிருந்து ஏதும் பயன் அடைந்து கொண்டால் | கண்ட மரத்தின் தன்மைகளில் ஒன்றை அம்மனிதர் பெற்றுக் கொள்வார். அதாவது, 'ரிஸ்க்'கையும் அதிகமான செல்வத்தையும் அடையப் பெறுவர். |
| 353. கனமான தடி, வீட்டின் உத்திரம் போன்றவற்றைக் கண்டால் | தீனுடைய விஷயத்தில் நயவஞ்சகத் தனமும்-நயவஞ்சக மனிதரையும் குறிக்கும். |
| 354. காய்ந்த விறகும் பச்சை விறகும் காணப்பட்டால் அது சிறிதாகவோ பெரிதாகவோ இருந்தாலும் | வீட்டு உத்திரத்திற்குரிய பலன்தான் இதற்கும் கூறப்படும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 355. 'அஸா' என்னும் ஊன்று கோல் காணப்படின் | அது ஊன்றுவதற்குப் பயன் படுவது போன்று சிறப்பான மனிதரையும் குறிக்கும் |
| 356. முள் மரத்தைக் கண்டால் | கண்டவருக்கு வருத்தத்தை ஏற்படுத்தும், அது ஆண் பிள்ளையையும் குறிக்கும். |
| 357. அத்தி மரத்தைக் கண்டால் | கவலையும், கைசேதமும் உண்டாகும். |
| 358. பச்சைக் கோது மையை தின்னக் கண்டால் | தம்முடைய மார்க்கத்தில் நல் இணக்கத்தையும், நல்ல உண வையும் பெற்றுக் கொள்வார். |
| 359. காய்ந்த-அவிக்கப்பட்ட கோதுமையை தின்னக் கண்டால் | அவ்வாறு காண்பது நல்லதல்ல |
| 360. நெல், அரிசி சோறு இவற்றைக் கண்டால் | கவலையும் வருத்தமும் கொண்டு சம்பாதித்த முதலைக் குறிக்கும் |
| 361. எள் | அதிகமாகி வரும் நிரப்பமான செல்வமாகும். |
| 362. மொச்சை | துக்கமும்-கவலையும் ஏற்படும். |
| 363. பயிர் பச்சைகள் | அவருக்கு தீனிலும் துன்யாவிலும் விரும்பியது நடக்கும் |
| 364. பயிர் பச்சைகள் வழியே நடக்கக் கண்டால் | பயிர் இருந்திடும் நிலையின் படிக்கும், பசுமையின் படிக்கும் கனவு கண்டவருக்குத் தேவை யானது கிடைக்கும். சில சமயம் பயிர் பச்சைகளைக் காண்பது கவலையின் அறிகுறியை அறிவிப்பதும் உண்டு. |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 365. நிலத்தில விதைகள் தூவியிருப்பதைப் பார்த்தால் | நலவான சைகைகள்உண்டாகும் |
| 366. விதைகள் முளையிடப் பார்ப்பின். | பார்த்தவரின் நற்செயல்கள் அல்லாஹ்வால் ஒப்புக் கொள்ளப்பட்டதாவும். சில சமயம் அந்த நற்செயல்களால் உலகில் பிரபலமாவார். அதன் காரண மாக சிறப்பும் கண்ணியமும் கிடைக்கப் பெறுவார். சில பொழுது விதைகளை நிலத்தில் தூவுவதை காண்பது அவருக் குரிய பிள்ளைகளைக் குறிக்கும். |

## 18. பூமி-அதிலுள்ள மலை-காடு-கட்டடங்களைக் கனவில் காணுதல்

| கனவு | பலன் |
|---|---|
| 367. தமக்குத் தெரியாத நீண்ட பூமியைக் கண்டால் | அது அகண்ட உலகம் |
| 368. கனவில் தெரிந்த பூமி பரந்தும், பசுமையாகவும், பூமியில் இன்ன வகை பயிர்கள் என்று அறிந்து கொள்ள முடியாதது முளைத்திருக்கக் கண்டால் | அது இஸ்லாம் மார்க்கத்தைக் குறிக்கும். காடுகளைக் கண்டாலும் இதே பலன் தான். |
| 369. தமக்காக பூமி விரிக்கப்பட்டிருப்பது போல் கண்டால் | அவருடைய வாழ்க்கை நிலை நலவிலும் பாதுகாப்பிலும் இருந்துவரும். |
| 370. தான் பூமிக்குள் அதைத் தோண்டாமலேயே மறைந்து கொள்வது போல் கண்டால். | உலகத்தைத் தேடுவதிலேயே இறந்து போவான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 371. வெட்ட வெழியில் மொட்டைக் காட்டில் இருந்து தின்று கொண்டும், குடித்து கொண்டும் இருப்பது போல் கண்டால் | தீனிலும் துன்யாவிலும் நிஃமத்துகளையும், கண்ணியத்தையும் அடையப் பெறுவார். |
| 372. மண்ணையோ, புழுதியையோ அவை போன்றவற்றைக் கண்டால் | காணப்பட்டவை அவர் பெறவிருக்கும் பொருள் என்று கூறப்படும். |
| 373. மணலையோ, புழுதியையோ தின்ன, மன்னோ, புழுதியோ தமக்கு மேலிருக்க கண்டால் | அவர் சீமானாவார். பெரும் பொருளையும் கிடைக்கப் பெறுவார். அவ்வாறே அதில் நடக்கவோ, அவற்றை சுமக்கவோ கண்டாலும் அவர் பொருள் சம்பாதிப்பதில் பெருமுயற்சி மேற்கொண்டு அதன்பின் அதனை அடையப் பெறுவார். |
| 374. விண்ணுக்கும் மண்ணுக்குமிடையே புழுதியைக் கண்டால் | அது நல்லதல்ல |
| **மலை** | |
| 375. மலையின் மீது அமர்ந்திருக்கக் கண்டால் | மற்றொரு மனிதனை வெற்றி கொள்வான். |
| 376. மலையைத் தமக்குரியதாக ஆக்கிக் கொள்வது போல்கண்டால் | இன்னொரு மனிதரிடம் இவர் சேர்ந்து இருப்பார். |
| 377. மலை மீது ஏறக் கண்டால் | மேன்மையும், கண்ணியமும், சிறப்பும் கிடைக்கப் பெறுவார். |
| 378. தன் வீடு விழுந்து விட்டதாகவோ, பாழடைந்து விட்டதாகவோ கண்டால் | உலக காரியங்கள் தீய அமல்கள் காரணமாக அழிந்து விடும். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 379. தமக்கு அறிமுகமில்லாத ஒரிடத்தில் வீடு கட்டுவது போல் கண்டால் | அவ்வாறு கண்டவரிடம் நற்செயல்கள் தரிபடும். மறுமையிலும் அவரின் நிலை நல்லதாகவே இருக்கும். |
| 380. தமக்குத் தெரியாத ஒரு வீட்டை இடிப்பதாகக் கண்டால் | முன் செய்த தீய செயல்களையும் விட்டு விடுவார். |
| 381. இடிக்கும் வீடு தமக்குத் தெரிந்த வீடாகயிருப்பதைப் பார்ப்பின் | தன் முட்டாள் தனத்தால் தன்னுடைய உலகக் காரியங்களை வீணாக்கி விடுவான். |
| 382. ஒருவர் கனவில் கப்ரு வெட்டுவது போல் பார்த்தால் | வீடு கட்டுவார். |
| 383. ஒரு நகரமோ, அதில் சில பகுதிகளோ இடிந்தது போல் பார்த்தால் | அந்நகரைச் சார்ந்த மக்களின் மார்க்கம் எடுபட்டுப் போகும். சிலசமயம் அவர்களின் உலக வாழ்க்கையும் வருத்தத்தை யளிக்கும். |
| **ஏணி** | |
| 384. ஏணி போன்றவற்றில் ஏறக் கண்டால் | உலகத்தில் தர்மம் செய்வதில் முன்னேறுவார். |
| **வீட்டு வாசல்** | |
| 385. வீட்டின் வாசல் கழற்றப்படுவதாகவோ படிகளை இடிப்பது போன்றோ பார்த்தால் | வீட்டிலுள்ளவர்கள் இறந்துவிட நேரிடும். |
| 386. வீட்டின் வாசல் இடிக்கப்பட்டிருப்பதாகக் கண்டால் | மனைவியைத் தலாக் சொல்வார். |

| | |
|---|---|
| **ஆணி** | |
| 387. ஓர் ஆணியை, முளைக்குச்சியைப் பார்த்தால் | பார்த்தது ஓர் ஆண். அவர் மூலம் மக்கள் தங்கள் வேலைகளை முடித்துக் கொள்வார்கள். பாலத்தைப் பார்த்தாலும் இது போலத் தான் நடக்கும். |
| **மலை.** | |
| 388. மலைகளை அழைப்பது போல் பார்த்தால் | உலமாக்கள் கெட்டுப் போவார்கள். |
| 389. தன்னைத் தானே அழைப்பது போல் பார்த்தால் | அதில் நன்மையில்லை. |
| 390. தன் வீட்டை அழைப்பது போல் கண்டால் | அது விபச்சாரத்தைக் குறிக்கும். |

## 19. மழை-கப்பல் போன்றவற்றைக் காண்பது

| கனவு | பலன் |
|---|---|
| 391. மழை பெய்யக் கண்டால் | இலட்சம் ரஹ்மத்துகள் உண்டாகும். |
| 392. விண்ணிலிருந்து நெய்யாக, தேனாக, பாலாக, ஜைத்தூன் எண்ணெய்யாக அல்லது இவைப் போன்று மழைப் பெய்யப்பார்த்தால் | கனவில் பார்த்த இடத்தில் உள்ளவர்களுக்குக் கொள்ளை வாழ்வும், கைரும் வானத்திலிருந்து அவர்களுக்கு ரிஸ்க்கும் இறங்கும். விரும்பப்படும் மழை அனைத்திற்கும் இவ்வாறே நிகழும். |
| **வெண் மேகம்.** | |
| 393. வெண்மேகத்தைக் கண்டு, அதில் இருளும், காற்றும், மழையும் | ஹிக்மத்தும், இல்மும்,ரஹ்மத்தும் ஏற்படும். |

இல்லாதிருப்பின்

394. வெண்மேகத்தில் நடப்பதாகவோ, அதனைத் தமக்குரியதாகவோ, அதைச் சேகரிப்பதாகவோ கண்டால்

மேற்கூறப் பெற்ற மகத்துவமிக்க செயலை அடையப் பெறுவார்.

## பனிக்கட்டி

395. பனிக்கட்டியைப் பார்த்தால்

எந்த வகையிலும் நன்மையில்லை.

396. தண்ணீர் பனியால் உறைந்து விடப் பார்த்தால்

கவலையும், வேதனைகளும் சூழும்.

## கிணறு

397. கிணற்றைப் பார்த்தால்

அது தம்முடைய பொருளும், நிர்வாகம் செய்வதையும் குறிக்கும்.

398. கிணற்றை தோண்ட எண்ணி முடியாமல் போய் விட்டதாகப் பார்ப்பின்

அவரின் குடும்ப நிர்வாகத்தில் வருத்தம் ஏற்படும். உணவில் குறைந்த அளவே பெற்றுக் கொள்வார்.

399. தம் வீட்டில் ஒரு கிணற்றை கெட்டியாகவும், உயரமாகவும் கட்டப் பார்த்தால்

அவர் பொருள் தங்கும். அல்லாஹ் அவருக்கு எத்தகைய கஷ்டமும் இல்லாமல் நல்ல பொருளைக் கொடுப்பான்.

400. வயலுக்குத் தண்ணீர்ப் பாய்ச்சக் கண்டால்

அல்லாஹ்வின் பாதையில் அந்த மனிதர் பொருளை செலவு செய்வார்.

401. தண்ணீரை அள்ளி வீணாக ஊற்றக் கண்டால்

பயனற்ற வழியில் பொருளைச் செலவிடுவான்.

402. தண்ணீரை மனிதர்

களுக்கு மட்டும் குடிக்கக் கொடுப்பதாகக் கண்டால்
சிலருக்கு ஹஜ்ஜு செய்ய செலவுக்கு கொடுப்பார்.

403. தண்ணீரை அள்ளிய பொழுது அதில் நஜீஸ் அல்லது அருவருப்பான ஒன்று தென்படப் பார்த்தால்
தன்னுடைய நல்ல பொருளை கெட்ட பொருளுடன் கலப்பான்.

### ஆற்றுநீர்

404. தெளிந்த ஆற்று நீரைக் குடிப்பதாகப் பார்த்தால்
நலவையும் மணமான வாழ்வையும் அடைவார்.

405. கலங்கிய ஆற்றில் நீர் அருந்தக் கண்டால்
அவன் குடித்த அளவிற்கு நோயும், கவலையும் பீடிக்கும்.

### கடல்

406. கடலைக் கண்டால்
சிறப்பான ஆட்சியாளனைக் குறிக்கும்.

407. கடல் பொங்காமல் அமைதியாக இருக்க அதில் நீர் அருந்துவதாகப் பார்த்தால்
அவர் அதில் எவ்வளவு நீரைப் பருகினாரோ அந்த அளவிற்கு ஆட்சி அதிகாரத்தை அடைய பெறுவார். அல்லது உலக வாழ்க்கையில் நிர்வாகத்தை அடையப் பெறுவார்.

408. கடல் கலக்கமுற்றும், இருளாகவும், அமளி துமளியுடனும் இருக்கக் கண்டால்
கண்டவனுக்கு அச்சமும் கவலையும், வருத்தமும் கண்ட அளவின் படி பீடிக்கும்.

### கப்பல் - தோணி

## கனவின் விளக்கம்

409. கப்பல் - தோணி முதலியவற்றைப் பார்த்தால்

பல நிலைகளில் ஈடேற்றத்தையே குறிக்கும். சிலபொழுது ஆட்சியாளர் அளவில் சேர்த்து வைப்பதையும் குறிக்கும். ஒரு வேளை கவலை-துக்கம் முதலியவற்றையும் குறிக்கும். அவ்வாறு நிகழ்ந்தாலும் விரைவில் ஈடேற்றம் பெறுவார்.

410. கடலில் கப்பலைப் பார்ப்பின்

அக்கப்பல் சிறிதாகவோ, பெரிதாகவோ, நீண்டதாகவோ இருக்கும் அளவின் படி, அரசர், ஆட்சியாளர் முதலியவர்களிடம் செல்வார். எனினும் அவர்களை விட்டும் வெளியேறி விடுவார்.

411. கப்பலுக்குள், தண்ணீர் இருக்க, அதில் தாமும் இருப்பது போல் கண்டால்

கவலையும்-துக்கமும் நேரிடுவதைக் குறிக்கும். அல்லது நோய் வருவதைக் குறிக்கும். அல்லது சிறையில் தள்ளப்படும் நிலை ஏற்படும். எனினும் அவற்றை விட்டும் ஸலாமத்துப் பெறுவார்.

412. கப்பலை விட்டும் வெளியேறினால்

விரைவாக ஈடேற்றம் பெறுவார்.

### தண்ணீர்.

413. தண்ணீர் சுழித்து, சுழித்து ஒடுவதாகக் கண்டால்

அது நல்வாழ்க்கையைக் குறிக்கும்.

414. கலங்கிய நீரைக் குடித்தால்

குடித்த அளவிற்குக் கவலை ஏற்படும்.

415. கேணியில் உள்ள நீரில் உளூச் செய்யவோ குளிக்

கவோ பார்ப்பின்

கவலையும்-துக்கமும் நீங்கிடக் காண்பார். அவர் கவலையில் இருந்தால் அல்லாஹ் அவரின் கவலையை நீக்கிவிடுவான். அச்சம் கொண்டவராக இருந்தால் அச்சம் அகன்று விடும். கடனாளியாக இருந்தால் அல்லாஹ் அவரின் கடனை நீக்குவான். பாவியாக இருந்தால், அவரை விட்டும் பாவங்களைப் போக்கி விடுவான். நோயுற்றிருந்தால் நோய் நீங்கப் பெறுவார்.

## மரம் - இலைகள்

416. மரங்கள் காய்ந்திருப்பது போன்றோ, இலைகள் தழை யுடையதாகவோ இருப்பது போல் பார்ப்பின்

அவருடைய மனைவி குழந்தையைப் பெறுவாள்.

417. உளுவும், குளிப்பும் நிரப்பமாக நிறைவேறியதாக பார்த்தால்

பாவதோஷம், வருத்தம் முதலியவற்றை விட்டும் நீங்கி விடுவார்.

## சுட்ட கல்

418. சுடப்பட்ட செங்கலை சூளையிலிருந்து எடுக்கப் பார்ப்பின்

ஒன்று திரட்டப்பட்ட செல்வத்தைப் பெற்றுக் கொள்வார்.

419. சூளையில் அடுக் கப்பட்ட செங்கல் ஒன்றை எடுத்தால்

ஓர் ஆண் மகனை இழக்க நேரிடும். வல்லாஹு அஃலம்.

## 20. வானம்-பொழுது-பிறை-நட்சத்திரம்-கியாமத்து நாள்-சுவர்க்கம் முதலியவற்றைக் காண்பது

| கனவு | பலன் |
|---|---|
| 420. வானத்தில் ஏறி, அதனுள் நுழைவதாகப் பார்ப்பின் | இவரின் நற்செயல்களுக்கு மக்கள் ஆதரவாகவும், அல்லாஹ்வின் அற்புதங்களைக் கொண்டு வெற்றியும் கிடைப்பதுடன் சிராத் என்னும் பாலத்தைக் கடக்கவும் செய்வார். உலகத்தில் பல சிறப்புக்களையும் பெற்று வாழ்வார். |
| 421. வானத்தில் ஏறாமல் தாம் வானத்தில் இருந்தால் | சில நாட்களுக்கு உலகில் சிறப்புடன் இருப்பார். |
| **சூரியன்** | |
| 422. சூரியன் ஒளியுடனிருக்க அதைப் பிடித்துத் தமக்குரியதாக ஆக்கிக் கொள்ளக் கண்டால் | சூரியன் எவ்வளவு ஒளியுடனிருக்கக் கண்டாரோ அந்த அளவிற்கு சிறப்பான அதிகாரத்தையும், ஆட்சியாளர்களைப் பற்றிப் பிடித்து வாழ்வையும் வளத்தையும் பெற்றுக் கொள்வார். |
| 423. மேகம் சூரியனை மறைத்து இருந்தால் | அரசனுக்கோ, தம் பெற்றோர்களுக்கோ நோய் அல்லது கவலைப் பற்றும். |
| 424. சூரியனுடன் சண்டையிடக் கண்டால் | அவன் அரசனுடனோ, தாய் தந்தையர்களில் ஒருவருடனோ சண்டையிட நேரிடும். |
| 425. சூரியன் தம் வீட்டில் மட்டும் உதயமாகக் கண்டால் | கண்டவர் மணமுடிக்காதவராயிருந்தால் மணம் செய்து கொள்வார். திருமணம் ஆனவராக இருப்பின், ஆட்சியாளரின் புறத்தால் அதிகாரத்தைப் பெற்றுக் கொள்வார். |

### பிறை

426. பிறையில் கிரகணம் பிடிக்கவோ அல்லது அது சிவப்பு நிறமாக அல்லது இருண்டிருக்கக் காணின் — அவர் அமைச்சராக இருப்பின் அவரில் கோளாறு உண்டாகும். சாதாரணமானவர் கண்டால் அவரின் மனைவி அல்லது பிள்ளைகளுக்குக் குறை ஏதும் நிகழும்.

427. பிறை தம் மடியில் இருப்பதாகவோ, கையில் இருப்பதாகவோ பார்த்தால் — கண்டவருக்குப் பயன் விளையும். குழந்தையும் பெறுவார்.

428. தம் வீட்டிலோ, விரிப்பிலோ பிறை இருப்பின் — அப்பிறையின் அழகின் அளவின்படி வடிவு கொண்ட பெண்ணாகும். கனவு கண்டவள் பெண்ணாகயிருந்தால், அழகான மாப்பிள்ளையை மணப்பாள்.

429. மாதத்தின் துவக்கமில்லாத நாளில் இளம் பிறையைக் காணின் — அவரை நோக்கி வருகை தரும் அரசனைக் குறிக்கும். அல்லது அவருக்குப் பிறக்கவிருக்கும் பிள்ளையைக் குறிக்கும். அல்லது காணாமற் போனவர் திரும்பி வருவதைக் குறிக்கும். அல்லது புதிய செய்திகள் இவருக்கு அறிய வருவதைக் குறிக்கும்.

### நட்சத்திரம்

430. 'மிர்ரீக்' என்னும் நட்சத்திரம் கண்டால் — அரசனின் படைக்கு அதிகாரியாக இருக்க நேரிடும்.

431. 'Zஜுஹல்' என்னும் நட்சத்திரம் கண்டால் — கண்டவனை வேதனைகள் சூழும்.

432. 'முஷ்தரீ' என்னும் நட்சத்திரம் கண்டால் — பொருளைப் பாதுகாப்பார். அரசனின் மக்களைக் கண்காணிப்பார். சிலபொழுது கண்ணியமிக்க ஆலிமையும் குறிக்கும்.

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 433. 'ZஜுFஹ்ரா' என்னும் நட்சத்திரம் கண்டால் | அது அரசனின் மனைவியைக் குறிக்கும். |
| 434. 'அதாரித்' என்னும் நட்சத்திரம் கண்டால் | அரசரின் பணியாள் ஆவார். |
| 435. நட்சத்திரங்களைத் தின்னக் கண்டால் | கண்ணியத்திற்குரியவர்களின் பொருளைத் தின்பவர் ஆவார். கஷ்டமும், துன்பமும் வந்தடையும். |
| 436. நட்சத்திரத்தைக் கண்டால் | ஒரு மனிதரின் மூலமோ கண்ணியவான்கள் மூலமோ சிறப்பினை அடையப் பெறுவார். சில சமயம் கனவுகள் பொருத்தக் கேட்டின் மீதும் அறிவிப்பதுண்டு. ஏனென்றால், பிறை என்பது குறி சொல்பவர் மீதும் அறிவிக்கும். |
| 437. நட்சத்திரம் பூமியில் விழக் கண்டால் | அது விழுந்த இடத்தில் வேதனைகள் சூழும். |
| 438. நட்சத்திரத்தைக் கையில் எடுக்கக் கண்டால் | கண்டவருக்குச் சிறந்த குழந்தைப் பிறக்கும். |
| **வானம்** | |
| 439. வானம் தம்மைச் சுற்றுவதாகக் கண்டால் | பயணம் போவார். |

ஹிகாயத் : முஹம்மது இப்னு சீரீன் (ரஹ்) அவர்கள் உணவு அருந்திக் கொண்டிருந்தார்கள். அது சமயம் ஒரு பெண் அங்கு வந்து, "நான் கனவொன்று கண்டேன்" என்றாள்.

இமாம் அவர்கள், "நீ கண்ட கனவைக் கூறு!" என்றார்கள். அப்பெண் 'உண்டு முடியுங்கள்! பிறகு சொல்கிறேன்" என்றாள். அவர்கள் உண்டு முடிந்த பின்னர், 'இப்பொழுது கூறு!' என்றனர்.

"பிறை 'சுரைய்யா' என்னும் நட்சத்திரத்தினுள் நுழையக் கண்டேன். எனக்குப் பின்னால் ஒருவர் நின்று கொண்டு, "ஓ பெண்ணே! நீ கண்ட கனவை முஹம்மதுப்னு சீரீனிடம் சென்று கூறு!" என்றார்" என்பதாக அப்பெண் தான் கண்ட கனவைக் கூறினாள். அதைக் கேட்டதும் இமாம் அவர்கள் தங்கள் கையைப் பிடித்தவாறு, 'எவ்வாறு கண்டாய் நன்றாகச் சொல்!' என்றனர்.

## *கனவின் விளக்கம்*

மீண்டும் அவள் அக்கனவைச் சொல்லிக் காட்டினாள். இமாம் அவர்களின் முகம் மஞ்சனித்து, தங்கள் வயிற்றைப் பிடித்துக் கொண்டனர்.

உடனே எழுந்தார்கள். அவர்களின் நிலை கண்டு, அவர்களின் சகோதரி, "உங்களுக்கென்ன நேர்ந்து விட்டது? முகம் மஞ்சனித்து விட்டதே!" எனக் கேட்க,

அவர்கள், "எப்படி மஞ்சனிக்காமல் இருக்கும்? இப்பெண் என்னை இன்னும் ஏழு நாட்களில் கப்ரில் அடக்கப்படும் என்று கூறுகிறாளே! என்றார்கள்.

அவள் கண்ட கனவின்படியே அவர்கள் ஏழு நாட்களில் இறந்து அடக்கம் செய்யப்பட்டார்கள்.

இமாம் ஜஃபருஸ் ஸாதிக் (ரஹ்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "என் கழுத்தைப் பிறை கட்டிப் பிடித்து கொண்டது போல் கனவொன்று கண்டேன்" என்று கூற, இமாம் அவர்கள் "நீ திருமணம் ஆகாதவன்தானே?" என்று வினவினர்.

அந்த மனிதர், 'ஆம்!' என்றார். அப்பொழுது இமாம் அவர்கள் "உனக்கு அழகான பெண்ணை மணம் செய்து வைக்கப்படும்" என்றார்கள். அவர் நீண்ட நாட்களுக்குப் பின்னர் திருமதீனாவில் ஓர் அழகிய பெண்ணை மணந்தார். அதன் பின்னர் மீண்டும் அவர் இமாம் அவர்களிடம் வந்து, "என் மனைவி தன் கனவில் தான் பிறையைச் சுமந்து கொண்டிருப்பதாக பார்த்தாக கூறுகின்றாள்" என்று அவர் கூறினார். 'அவள் இப்பொழுது கருவுற்றிருக்கிறாளா?' எனக் கேட்டார்கள். அம்மனிதர், 'ஆம்!' என்றார். இமாம் அவர்கள் "உன் மனைவி அழகான குழந்தையைப் பெற்றெடுப்பாள்' எனக் கூறினார்கள். இமாம் அவர்கள் கூறியவாறே அப்பெண்ணுக்கு அழகான குழந்தைப் பிறந்தது.

### கியாமத்

440. கியாமத் என்னும் மறுமை நாள் வந்து விட்டது போல் கண்டால்

கனவு காணப்பட்ட பகுதியில் நீதியை விரிவாக்கப்படும். அப்பகுதியில் வாழ்பவர்கள் அநியாயம் செய்பவர்களாக இருப்பார்களாயின் அல்லாஹு தஆலா அம்மக்களை வேதனை செய்வான். அம்மக்கள் அநியாயம் செய்யப்பட்டவர்களாயிருந்தால் உதவி செய்யப் படுவார்கள்.

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 441. மறுமை நாளில் அல்லாஹ்வின் சமூகம் இருப்பதுபோல் கண்டால் | அது மிகக் கடினமான ஒன்றாகும்; மேலும் அது மிகவும் சரியான கனவுமாகும். |
| **சுவர்க்கம்** | |
| 442. சுவர்க்கம் புகுவதாக கண்டால் | கண்டவாறு அவர் சுவனம் புகுவார். அக்கனவு அவர் செய்த நல் அமல்களுக்குரிய நன்மாராய மாகும். |
| 443. சுவர்க்கத்துக் கனிகளை தாம் உண்பதாகவோ, பிறருக்கு உண்ணக் கொடுப்பதாகவோ பார்ப்பின் | அப்பழங்களை உண்ட அளவின் படி நன்மையுண்டாகும். |
| 444. சுவர்க்கக் கனிகள் கிடைக்கப் பெற்று அவற்றைத் தின்னாமலிருந்தாலோ, தின்பதற்கு சக்தி பெற முடியாமல் போய் விட்டதாகவோ பார்ப்பின் | தீனுடைய விஷயத்தில் நலவுகள் வந்து சேரும். அதைக் கொண்டு அவர் பயன் பெற்றுக் கொள்ளமாட்டார். சில சமயம், பயன் தராத இல்மையும் அக்கனவு குறிக்கும். |
| 445. சுவர்க்க அருவிகளில் ஒன்றில் நீர் அருந்துவது போன்றோ, சுவர்க்க ஆடைகளை அணிவது போல் கண்டாலோ | இம்மையிலும் மறுமையிலும் தக்வாவுடன் இருப்பார். |
| 446. சுவர்க்கப் பூங்காவில் உலவுவது போன்றோ, ஆறுகள், அருவிகள், ஹூருல் ஈன்களை அடையப் பெறுவதாகக் கண்டால் | இவ்வுலகில் நன்றியறிதலையும், தக்வாவையும் பெற்று கொள்வதுடன், மறுமையிலும் தாம் கண்ட அருட்கொடைகளைப் பெற்றுக் கொள்வார். |
| **நரகம்** | |
| 447. நரகம் புகுவது போல் கண்டால் | பெரும் பாவங்களில் மூழ்குவான். நரகத்தைக் கண்டவன் கெட்டொழிவதைக் குறிக்கும். எனவே, அவன் தவ்பாவைக் கொண்டும், தன் நஃப்ஸுடன் |

இறைவழியில் முயற்சி செய்வதுடன், நற்செயல்கள் ஆற்றுவதில் தீவிரப்பட வேண்டும். கனவில் நரகத்தில் இவனை ஏதும் அணுகாதிருந்தால் உலகில் துக்கம் பீடிக்கும்.

## நெருப்பு

448. நெருப்பைப் பஞ்சமான பகுதியில், ஓர் இடத்தில் அல்லது ஒரு தெருவில், ஒரு வீட்டில் கொழுந்து விட்டெரியும் சப்தம் கேட்க, அது எல்லாவற்றையும் தீய்த்துவிடுவது போல் பார்ப்பின்

அந்த இடத்தில் அநியாயம் பெருகி விடும்.

449. மாமிசத்தை நெருப்பில் சுடுவதாகப் பார்ப்பின்

இவரை மற்றவர் புறம் பேசுவதை விட்டும் நீங்கியிருப்பார்.

450. ஒரு செம்புச் சட்டியில் உணவு சமைக்கக் கண்டால்

ஒரு வீட்டார் மூலம் இவருக்குப் பயன் தரும் காரியம் நிறைவேறும்.

451. நெருப்பைத் தின்பது போல் பார்ப்பின்

அவன் அனாதைகளின் சொத்தைத் தின்ன நேரிடும்.

452. வீட்டிலுள்ள விளக்கு அதிக ஒளியுடன் எரியப் பார்த்தால்

அவ்வீட்டாரின் நிலை நல் இணக்கத்துடன் இருக்கும்.

453. விளக்கு மங்கலாக எரியக் கண்டால்

வீட்டாரின் நிலையும் அவ்வாறே இருக்கும்.

454. விளக்கு அணைந்து விடப் பார்ப்பின்

அது மரணத்தைக் குறிக்கும் நிலை உண்டாக்கவில்லையாயின், அவனைத் துன்பம் தொடும்.

455. மக்கள் வழி அறிந்து நடக்க, நெருப்பு மூலம் வெளிச்சம் உண்டாக்குவது போல் கண்டால்

இவர் மூலம் மக்கள் பயன் பெறும் இல்மையும் ஹிக்மத்தையும் குறிக்கும்.

456. தான் சாம்பலை அள்ளுவது போன்றோ அல்லது அதைச் சுமப்பது போன்றோ கண்டால்

கற்ற கல்வியின் மூலம் வீணானவற்றைத் தேடுவான். மக்கள் இவன் கற்ற கல்வியால் பயன் பெறமாட்டார்கள்.

## 21. குர்ஆன் ஸூராக்களை ஓதக் காண்பது

| கனவு | பலன் |
| --- | --- |
| **ஸூரத்துல் பாத்திஹா**<br>457. ஒருவர் ஸூரத்துல் பாத்திஹாவை ஓதுவது போன்றோ, அதில் சிலவற்றை ஓதக் கண்டாலோ | மகிழ்த்தக்க பயன்களைப் பெற்றுக் கொள்வார். இன்னொரு சொல்லின்படி துஆக்கள் ஒப்புக் கொள்ளப்பட்டவராயும் ஆவார். |
| **ஸூரத்துல் பகறா**<br>458. ஸூரத்துல் பகறாவை முழுவதுமோ, சிலவற்றையோ ஓதக் கண்டால் அதில் ஓர் எழுத்தையாயினும் சரியே! மேலும் இவர் மீது அதனை மற்றொருவர் ஓதி விட்டது போல் கண்டால் | கனவு கண்டவரின் வாழ்நாள் நீண்டதாகயிருக்கும். மார்க்கத்தில் நல் இணக்கத்தைப் பெறுவார். அதனை ஓதியது போல் கண்டவர் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்குப் பயணம் போவார். அதனால் அவருக்குப் பெயரும் புகழும் கிடைக்கும். இன்னொரு சொல்படி, 'காஜி'யாக இருப்பாராயின் இவரின் இறுதி முடிவைக் குறிக்கும். ஆலிமாக இருப்பின், வாழ்நாட்கள் நீண்டுவிடும். அவரின் நிலையும் அழகானதாக இருக்கும். |

(குறிப்பு : இவ்வத்தியாயத்தில் கனவில் ஓதக் கண்ட ஸூராக்களின் பெயர்கள் கனவு பகுதியில் தரப்பட்டுள்ளன.)

| | |
| --- | --- |
| 459. ஸூரத்து ஆலுஇம்ரான் | தன் குடும்பத்தில் கெட்ட பெயர் எடுப்பார். வயது முதிர்ந்த போது 'ரிஸ்க்' கொடுக்கப் பெறுவார். பயணங்கள் மிகுதியாகச் செல்வார். |

கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 460. ஸூரத்துன்னிஸா | தம் வாழ்வின் இறுதியில் அழகான பெண் மகளை காண்பார். அவள் அவருடன் உறவாக இருக்கமாட்டாள். இவர் சிறந்த பேச்சாளராகவும், நாகரிகம் மிக்கவராகவுமிருப்பார். |
| 461. ஸூரத்துல் மாயிதா | உணவளிக்கப்படுவார். அவரின் பகைவர்களால் துன்பங்கள் சூழும். |
| 462. ஸூரத்துல் அஃராஃப் | அனைத்து இல்முகளையும் கற்பார். சில பொழுது பயணம் சென்ற இடத்தில் இறக்க நேரிடும். |
| 463. ஸூரத்துல் அன்ஆம் | மார்க்கத்தைப் பேணி நடப்பார். நல்லுணவு கொடுக்கப் பெறுவார். இவ்வுலகிலும் மறுவுலகிலும் நற்பெயர் கிட்டும். |
| 464. ஸூரத்துல் அன்ஃபால் | சிறப்பும், வெற்றியும் பெற்றவராகத் திகழ்வதுடன் மாக்கத்தில் ஸலாமத் ஆனவராயுமிருப்பார். |
| 465. ஸூரத்துத் தவ்பா | கனவு கண்டவர் நல்லோர்களை விரும்புவார். |
| 466. சூரா யாஸீன் | இவர் பொருளில் சிலவற்றில் முஸீபத்து பிடிக்கும். இன்னொரு கூற்றின்படி, ஓதியவர் நன்மாராயத்தையும், நலவையும் பெற்றுக் கொள்வார். |
| 467. ஸூரா ஹூத் | பகைவர்கள் அதிகமாவார்கள். பயணம் புறப்படுவார். |
| 468. ஸூரா யூஸுஃப் | இவரின் குடும்பத்தார் பகையாவார்கள். பயணத்தில் நன்மைகளைப் பெற்றுக் கொள்வார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 469. ஸூரத்துர் ரஃது | ஏழ்மை உண்டாகும். இன்னொரு சொல்படி, மரணம் நெருங்கும். |
| 470. ஸூரா இப்றாஹீம் | இறைவனைத் துதிப்பவர்களுள், தவ்பா செய்பவர்களுள் இருப்பார். |
| 471. ஸூரத்துல் ஹுஜ்ர் | தம் குடும்பத்தவர்களால் பேணுதலுக்குரியவராயும், மிஸ்கீனாகவும் இருப்பார். இந்த ஸூராவை ஓதியவர் அரசராக யிருப்பின் அவர் காலம் நெருங்கிவிடும். 'காஜி'யாக இருந்தால் நன்நடத்தை யுடனிருப்பார். உறவினராக இருப்பின் குடும்பத்தில் சிறந்து விளங்குவார். கனவு கண்டவர் ஆலிமாகயிருந்தால் சிறப்புடன் இறப்பார்; மேலும் நபி(ஸல்) அவர்களின் கூட்டத்தாருடன் இருப்பார். |
| 472. ஸூரா பனீ இஸ்ராயீல் | அதிகாரத்தைப் பெற்றுக் கொள்வதுடன், பிறரின் கபட குணத்தை விட்டும் நீங்கி, அச்சமற்று இருப்பார். பித்னாக்களை விட்டும் தவிர்ந்திருப்பார் |
| 473. ஸூரத்துல் கஹ்ஃப் | வாழ்நாள் நீளமாகும். இவரின் நிலை சிறந்திருக்கும். மக்கள் மூலம் நற்பெயர் கிட்டும். |
| 474. ஸூரா மர்யம் | இவருக்கு நெருக்கடியிருந்தால் அல்லாஹ் நீக்கி வைப்பான். |
| 475. ஸூரா தாஹா | இரவில் எழுந்து தொழவும், நற்செயல்கள் செய்யவும், நல்லோர்களுடன் உறவு கொள்வதையும் விரும்புவார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 476. ஸூரத்துல் அன்பியா | மனிதர்களில் இவருக்கு அழகான நல்லெண்ணம் கொடுக்கப்படும். |
| 477. ஸூரத்துல் ஹஜ் | ஹஜ்ஜும், உம்ராவும் செய்வார். நோயுற்றிருந்தால் மரணமாவார். |
| 478. ஸூரத்துல் முஃமினூன் | இரவில் நீண்ட நேரம் வணங்கவும், அல்லாஹ்விடம் உருக்கமுடன் துஆச் செய்திடும் நிலையும் ஏற்படும். மேலும், அவனை அணுகிய முஸீபத்தைக் குறித்து அஞ்சுவான். |
| 479. ஸூரத்துந் நூர் | மக்களுக்கு நன்மையை ஏவி தீமையைத் தடுக்கும் பணியைச் செய்வதை உவப்பவராகவும், அல்லாஹ்விற்காக மற்றவர்களிடம் கோபங் கொள்பவராயும் இருப்பதுடன், உலகத்தில் சிறந்து விளங்குவார். |
| 480. ஸூரத்துல் புர்கான் | உண்மையை ஏற்று, பொய்யை வெறுப்பார். |
| 481. ஸூரத்துஷ்ஷுஃரா | உணவு விஷயத்தில் கடின நிலை ஏற்படும். ஒன்றைப் பெறுவதாயின் கஷ்டப்பட்டே பெற நேரிடும். |
| 482. ஸூரத்துந் நம்ல் | உண்மையை உவப்பார்; பொய்யை வெறுப்பார்; அவருடைய கூட்டத்தாருக்குத் தலைமை வகிப்பார். அறிவையும் பெற்றுக் கொள்வார். |
| 483. ஸூரத்துல் கஸஸ் | காட்டிலோ, வீட்டிலோ அல்லது இவர் தொழும் திசைகளில் |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| | முஸீபத்துகளால் சோதிக்கப்படுவார். |
| 484. ஸூரத்துல் அன்கபூத் | முஸீபத்துகளால் சோதிக்கப் படுவதை விட்டும் அல்லாஹ்வின் மூலம் நன்மாராயம் பெற்றுக் கொள்வார். |
| 485. ஸூரத்துர் ரூம் | நயவஞ்சகத் தன்மை உள்ளத்தில் ஏற்படும். இதை ஓதியவர் அரசராக இருப்பின் ஆலிமாவார். காஜியாகயிருப்பின் மிக்கப் பயன்கள் பெறுவார். |
| 486. ஸூரா லுக்மான் | எழுத்தாளர் ஆவார். ஹிக்மத் என்னும் நுண்ணறிவு கொடுக்கப் பெறுவார். |
| 487. ஸூரத்துஸ் ஸஜ்தா | ஏகத்துவ நம்பிக்கையில் உறுதியும், ஈடேற்றமும் பெறுவார். |
| 488. ஸூரத்துல் அஹ்ஸாப் | குடும்பத்தாரைப் போற்றி நடப்பார். நீண்ட ஆயுளைப் பெறுவார். தம் நண்பனுடன் குபாடமுடன் பழகுவார். |
| 489. ஸூரத்துஸ் ஸபா | போர் வீரனாவார். |
| 490. ஸூரத்துல் பாதிர் | அல்லாஹ்வைக் காணும் பேறு கிட்டும். அவ்லியாக்களில் ஒருவராவார். |
| 491. ஸூரா யாஸீன் | மார்க்கத்தில் உறுதியாக இருப்பார். |
| 492. ஸூரத்துஸ் ஸாஃப்பாத் | ஹலாலான வாழ்க்கையுடன், இரு ஆண் மக்களையும் அடையப் பெறுவார். |
| 493. ஸூரா ஸாத் | பெண் மக்களை உவப்பவராகவும், அவர்களின் நடத்தைகளை உவப்பராகவும் ஆவார். |

| | கனவின் விளக்கம் |
|---|---|
| 494. ஸூரத்துஜ் ஜுமர் | பேரப்பிள்ளைக் காணும் வரை இருப்பார். சில சமயம் பயணம் செல்ல நேரிடும். மீண்டும் தம் வீட்டிற்கு வராது போய் விடுவார். |
| 495. ஸூரா ஙாஃபிர் | உறுதியுடன் ஸலாமத்துப் பெற்று வாழ்வார். |
| 496. ஸூரா புஸ்ஸிலத் | ஷரீஅத்தைக் கடைபிடிப்பவர்களுடன் இணங்கி வாழ்வார். |
| 497. ஸூரா ஷூரா | இல்மையும்அமலையும் பெற்றுக் கொள்வார். |
| 498. ஸூரா ஜுஹ்ருஃப் | வாழ்க்கையில் வருத்தமே மிஞ்சும். |
| 499. ஸூரா துகான் | வம்பர்களின் தொல்லைகளிலிருந்து அச்சம் நீங்கியிருப்பார். மண்ணறையின் நரகத்தின் வேதனைகளை விட்டும், யகீன் பலவீனமாக இருப்பதை விட்டும் அச்சம் தீர்ந்திருப்பார். |
| 500. ஸூரா ஜாஸியா | துறவியர் கூட்டத்தில் சேர்வார். |
| 501. ஸூரா அஹ்காஃப் | பெற்றோரை நோவினைச் செய்பவராக இருந்து, பின்னர் தவ்பா செய்து மீண்டு விடுவார். |
| 502. ஸூரா முஹம்மத் | மலக்குல் மவ்த் அழகிய உருவில் இவரிடம் வருவார்கள். |
| 503. ஸூரா பத்ஹ் | அல்லாஹ் அவரை நேசிப்பான். |
| 504. ஸூரா ஹுஜ்ராத் | அல்லாஹ்வின் நல்லடியாரின் இதயங்களில் நெருக்கம் பெறுவார். |
| 505. ஸூரத்துல் காஃப் | |

| | |
|---|---|
| | இவர் இல்மு கற்று இவரின் ஊரார் இவரை அணுகி தேவைகளை நிறைவு செய்து கொள்வார்கள். இவரின் வாழ்வின் இறுதி நிலை ஆரம்ப நிலையை விட அழகான தாகயிருக்கும். |
| 506. ஸூரத்து Zஜாரியாத் | உலகத் தேவைகள் நிறைவு பெற்று, மத்ஹப்கள் அனைத்தையும் இணங்கி வாழ்வார். |
| 507. ஸூரத்துத் தூர் | இவரின் மார்க்க நடைமுறைகளை அல்லாஹ் ஒப்புக் கொள்ளும் நிலை பெறுவார். |
| 508. ஸூரத்துந் நஜ்ம் | இவருக்குப் பிள்ளைகள் கொடுக்கப்பட்டு, அப்பிள்ளைகள் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தைப் பெற்றவர்களாக இறப்பார்கள். மேலும் இம் மனிதர் இல்மு உடையவராயும், பேணுதல் உள்ளவராயுமிருப்பார். |
| 509. ஸூரத்துல் கமர் | ஓதியவரை சூனியம் பீடித்து பின்னர் ஈடேற்றம் பெறுவார். அல்லாஹ்வின் உதவியால் இவரை யாதொரு தங்கடமும் செய்யாது. |
| 510. ஸூரத்துர் ரஹ்மான் | உலகில் இறை அருட் கொடைகளைப் பெற்று, மறுமையில் ரஹ்மத்துகளைப் பெற்றுக் கொள்வார். |
| 511. ஸூரத்துல் வாகிஆ | நற்செயல்களிலும் வணக்க வழிபாடுகளிலும் முதன்மையாக இருப்பார். |
| 512. ஸூரத்துல் ஹதீத் | மார்க்கத்தில் இணக்கமும் செயல்கள் புகழ்வதற்குரியன வாகவுமிருப்பார். |

| கனவின் | விளக்கம் |
|---|---|
| 513. ஸூரத்துல் முஜாதலா | வழிகெட்டவர்களுடன் தர்க்கம் செய்து அவர்களை வெல்வார். |
| 514. ஸூரத்துல் ஹஷ்ர் | அல்லாஹ் இவரைப் பொருந்திய நிலையில் மண்ணறையிலிருந்து எழுவார். இவர் தம் பகைவர்களை அழிப்பார். |
| 515. ஸூரா மும்தஹினா | இவரைப் பீடைகள் பற்றி பின்னர் காக்கப்படுவார். |
| 516. ஸூரத்துஸ் ஸஃப் | ஷஹீதாவார். |
| 517. ஸூரத்துல் ஜும்ஆ | அல்லாஹ் இவருக்கு இவ்வுலக, மறுவுலக நலன்களைக் கொடுப்பான். |
| 518. ஸூரத்துல் முனாஃபிகூன் | நயவஞ்சகத்தனத்தை விட்டும் நீங்கி விடுவார். |
| 519. ஸூரத்துத் தகாபுன் | ஹிதாயத்திலும், தீனிலும், ஈமானிலும் நிலைத்து நிற்பார். |
| 520. ஸூரத்துத் தலாக் | இவருக்கும் மனைவிக்கும் இடையே பிணக்கும்பிளவும் ஏற்பட்டு மணமுறிவு ஏற்படும். |
| 521. ஸூரத்துத் தஹ்ரீம் | ஹராமானவற்றைச் செய்வதிலிருந்து காக்கப் பெறுவார். |
| 522. ஸூரத்துல் முல்க் | இவருக்கு இவ்வுலக, மறுவுலக நன்மைகளை அல்லாஹ் கொடுப்பான். பொருள்களை உடைமையாக்கிக் கொள்வதுடன் ஸதகாக்கள் அதிகம் செய்வார். |
| 523. ஸூரத்துந் நூன் | உதவியும், வெற்றியும் கிட்டு வதுடன், நீதிவானாகவுமிருப்பார். |
| 524. ஸூரத்துல் ஹாக்கா | இவர் உண்மையில் உறுதியாக யிருப்பதன் காரணமாக வெட்டு, குத்துக்களுக்கு ஆளாவார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 525. ஸூரத்துல் மஆரிஜ் | அச்சமற்றவராயும், சக்தி பெற்றவராயும், உதவிகள் செய்யப்பட்டவராயும் இருப்பார். |
| 526. ஸூரா நூஹ் | நன்மையை ஏவி தீமையைத் தடுத்திடும் கூட்டத்தாருடன் இருப்பார். |
| 527. ஸூரத்துல் ஜின் | ஜின்களை விட்டும் காக்கப் பெறுவார். |
| 528. ஸூரத்துல் முஜ்ஜம்மில் | இவரின் நடத்தைப் புகழ்தலுக் குரியதாக இருப்பதுடன், பொறுமையுடனும் இருப்பார். |
| 529. ஸூரத்துல் முத்தஸ்ஸிர் | இவரின் உணவில் நெருக்கடி ஏற்பட்டிருப்பின், அல்லாஹ் அதனை நீக்கி வைப்பான். |
| 530. ஸூரத்துல் கியாமா | சத்தியம் செய்வதை விட்டும் நீங்கியிருப்பார்; ஒருபோதும் சத்தியம் செய்யமாட்டார். |
| 531. ஸூரத்துல் இன்ஸான் | ஓதக் கண்டவருக்குக் கொடைத் தன்மையும், நன்றி செலுத்துதலும், நல்லுதவி கொண்டும் இறையாணைப் பிறக்கும். |
| 532. ஸூரத்துல் முர்ஸலாத் | அல்லாஹ் இவருக்கு உணவில் பெருக்கத்தைக் கொடுப்பதுடன், இவரின் பகைவரின் இடையூறுகளையும் நீக்கி வைப்பான். |
| 533. ஸூரத்துந்நபா | கவலைகள் அனைத்தையும் இவரின் உள்ளத்தை விட்டு அகற்றப்பட்டு, இவரின் செயல்கள் சிறப்புப் பெறும். இவர் புகழுக்குரியவராயும் இருப்பார். |

**கனவின் விளக்கம்**

| | |
|---|---|
| 557. ஸூரத்துத் தகாதுர் | பொருள்களை, மனைவி மக்களைவிட்டும் நீங்கி துறவியாகி விடுவார். |
| 558. ஸூரத்துல் அஸ்ர் | பொறுமையிலும், ஹக்கின் மூலமும் நல்லுதவி பெற்றுக் கொள்வார். |
| 559. ஸூரத்துல் ஹுமஜா | பொருளை ஈட்டி நல்வழியில் செலவிடுவார். |
| 560. ஸூரத்துல் பீல் | பகைவரை வெல்வதுடன் இஸ்லாத்தின் வழிமுறைப்படியும் நடப்பார். |
| 561. ஸூரத்து குரைஷ் | ஏழைகளுக்கு உணவு அளிப்பார். அல்லாஹ் இவர் மூலம் முஃமின்களின் இதயங்களை நெருக்கமாக்கி வைப்பான். |
| 562. ஸூரத்துல் மாஊன் | பகைவர்களை வெல்வார். |
| 563. ஸூரத்துல் கவ்ஸர் | இம்மையிலும் மறுமையிலும் நன்மைகள் மிகுந்தவராக இருப்பார். |
| 564. ஸூரத்துல் காஃபிரூன் | காபிர்களுடன் சண்டையிட்டு வெல்வார்; நல்லுதவி பெறுவார். |
| 565. ஸூரத்துன்னஸ்ர் | அல்லாஹ் இவரின் பகைவர்களை வெல்ல உதவிடுவான். மேலும் இவரின் இறுதி நெருங்கி விட்டதையும் குறிக்கும். காரணம் நபி (ஸல்) அவர்களின் இறுதி நிலையை இந்த ஸூராவின் மூலமே சுட்டிக் காண்பிக்கப்பட்டது. |

## கனவின் விளக்கம்

ஹிகாயத்: ஒரு மனிதர் இமாம் முஹம்மது சீரின் (ரஹ்) அவர்களிடம் வந்து, "நான் ஸூரத்துந்நஸ்ர் ஓதக் கனவு கண்டேன்" என்று கூறியபோது இமாம் அவர்கள், "நீ உன் குடும்பத்தாருக்கு வஸியத்துச் செய்து கொள். உன்னுடைய 'அஜல்' நெருங்கி விட்டது" என்றார்கள். அந்த மனிதர் 'ஏன் அவ்வாறு வஸியத்துச் செய்யச் சொன்னீர்கள்' எனக் கேட்ட பொழுது, இமாம் அவர்கள், 'அந்த ஸூராதான் நபி (ஸல்) அவர்களுக்கு இறுதியாக இறக்கப் பெற்றது என்பதனால் அவ்வாறு கூறினேன்' என்றார்கள்.

566. ஸூரத்துல் லஹப் — தம் நாட்டங்களை அடையப் பெறுவதுடன், பேரும் புகழும் எய்தப் பெற்று, தவ்ஹீது கொள்கையில் உறுதி பெற்று விளங்குவதுடன், குடும்ப நிர்வாகம் நன்கு நடைபெறும். ஆனால் குழந்தைகள் குறைவாகவே இருக்கும்.

567. ஸூரத்துல் இக்லாஸ் — தவ்பா செய்வார். அவரின் குழந்தைகள் நீண்ட காலம் வாழாது. தஃஸீர் விரிவுரையாளர்களில் ஓர் ஆலிம் கூறுகிறார், "ஒருவர் ஸூரத்துல் இக்லாஸ் ஓதுவது போல் கனவு கண்டால் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவார். அவரின் குடும்பத்தார்கள் இறந்த பின்னர், இறுதியாக நீண்ட ஆயுள் பெற்று வாழ்ந்திடும் பிள்ளையை கிடைக்கப்பெறுவார்."

568. ஸூரத்துல் பலக் — தீங்குகள் அனைத்தை விட்டும் பாதுகாக்கப்படுவார்.

569. ஸூரத்துன்னாஸ் — கனவு கண்டவரை பலாய் முஸீபத்துகள் அனைத்தை விட்டும் பாதுகாக்கப்படும், இன்ஷா அல்லாஹ்

## 22. விலங்குகளைக் கனவில் காண்பதன் விளக்கம்

| கனவு | பலன் |
|---|---|
| **யானை** | |
| 570. யானையில் ஏறுவது போன்றோ, அதைச் சூழ்ந்திருக்கக் கண்டாலோ, அது வலையில் சிக்கிக் கொண்டிருப்பதாகக் கண்டாலோ | அவர் அதிகாரத்தையும், அடக்கியாளும் தன்மையையும் கிடைக்கப் பெறுவார். அல்லது அரபியல்லாத அரசருக்குத் துணையிருப்பார். |
| 571. யானைக் கறியைத் தின்பதாகக் கண்டால் | கறியைத் தின்ற அளவிற்கு அரசனிடம் பொருளைப் பெற நேரிடும். அவ்வாறே, அதன் ரோமத்தையோ, நரம்பையோ கண்டாலும் |
| 572. போரில் யானை மீது அமர்ந்திருக்கக் கண்டால் | யானைப் படையினரை வெல்வார். |
| 573. தன்னை யானைப் பிடித்துக் கொண்டதாகக் கண்டால் | ஆட்சியாளரால் ஆபத்து ஏற்படும். |
| 574. நோயாளி கண்டால் | மரணமுண்டாகும். |
| **புலி** | |
| 575. புலியுடன் சண்டையிடுவதாகவோ, வெட்டுவது போன்றோ பார்த்தால் | பகைவனுடன் சண்டையிடுவார். |
| 576. புலியின் மீதேறி தாம் நாடியபடி அதைத் திருப்புவது போல் பார்ப்பின் | மகத்தான ஆட்சியதிகாரத்தைப் பெற்றுக் கொள்வார். பகைவர்களை அடக்கியாள்வார். |
| 577. புலியை வெட்ட எண்ணி, அது காணமற் போய்விடப் பார்ப்பின் | ஆட்சியாளரால் பயங்கரமும், திடுக்கமும் ஏற்படும். எனினும் தங்கடம் செய்யாது. |

| | |
|---|---|
| 578. புலிக் கறியைத் தின்ன பார்த்தால் | ஆட்சியாளரின் மூலம் செல்வத்தை அடைய நேரிடும். அவ்வாறே புலியின் உறுப்புக்களில் எதையேனும் தின்னப் பார்ப்பினும். |
| 579. புலியைத் தமக்குரிய தாக்கிக் கொள்ளக் கண்டால் | சக்தி பெற்ற ஒரு மனிதர் வைத்து விட்டுச் சென்ற பொருளை அனந்தரம் கொள்வார். |
| 580. பெண் புலியின் தலைக் கறியில் சிலவற்றைத் தின்ன, தலை முழுவதையும் தின்ன புலியைத் தமக்குரியதாக ஆக்கிக் கொள்வதாகக் கண்டால் | அவருக்கு மகத்தான அதிகாரம் கிடைக்கும். |
| 581. புலிப்பால் குடிக்கப் பார்ப்பின் | ரிஸ்க்கையும், நலவையும் பெற்றுக் கொள்வார். பகைவரை வெல்வார். |
| 582. புலி மீது ஏறக்கண்டால் | சிறப்பையும், மகிழ்ச்சியையும் பெற்றுக் கொள்வார். பகைவனை அடக்கியாள்வார். |

கரடி

| | |
|---|---|
| 583. கரடியைப் பார்ப்பின் | தீங்கும், பித்னாவும் ஏற்படுவதைக் குறிக்கும். சில பொழுது சதிமானம், சிறை புகுதல் போன்றவற்றைக் குறிக்கும். |
| 584. அதன்மீது அமரப் பார்த்தால் | ஒரு காரியகர்த்தனைப் பெற்றுக் கொள்வார். அவரைப் பெற உரிமையற்றவராக ஆகிவிட்டால் துக்கம் பிடிக்கும். பின்னர் அதிலிருந்து மீட்சி பெறுவார். |

## *கனவின் விளக்கம்*

| | |
|---|---|
| 585. கரடியைக் காண்பதால் | சிலபொழுது பயணம் போய மீண்டு வருவதைக் குறிக்கும். |
| **ஒட்டகம்** | |
| 586. ஒட்டகையைக் கண்டால் | தீனில் ஸலாமத்து உண்டாகும். பயணம் செல்ல நேரிடும். எதிர்பாரா வகையில் பொருள் கிடைக்கும். |
| 587. ஒட்டகையை வெட்டக் கண்டால், அது இவனுடன் பிணங்கிக் கொண்டது போல் கண்டால் | பகைவனை வெட்டுவார். |
| 588. அதிகமான ஒட்டகங்கள் ஓடிச் செல்வதாகவோ, அவற்றைத் தமக்கு உரிமையுடையதாக ஆக்கிக் கொண்டது போல் பார்த்தால் | மக்களின் மீது அதிகாரம் செலுத்துவார். |
| 589. ஒட்டகையின் பாலைக் கறப்பதாகப் பார்ப்பின் | பெண் பிள்ளையின் மூலம் ஹலாலான செல்வத்தைப் பெற்றுக் கொள்வார். |
| 590. ஒட்டகையிலிருந்து இரத்தம், சலம் போன்ற வற்றைக் கறக்கக் கண்டால் | அந்த செல்வம் ஹராமானதாகும். |
| 591. தன்னுடைய ஒட்டகை தன்னை விட்டும் போய் விட்டதாகவோ, திருடு போய் விட்டதாகவோ கண்டால் | அவனின் மனைவி பிரிந்து விடுவாள். |
| **குதிரை** | |
| 592. குதிரையைப் பார்த்தால் | அரசின் மூலம் செல்வமும், செல்வாக்கும் கிடைக்கப் பெறுவார். சிறப்பும் பெருமையும் ஏற்படும். நற்குண நல்லொழுக்கமுள்ள பெண் கிடைப்பாள். |

593. குதிரை தனக்கு அடங்கியதாகவோ, தன்னை முட்டுவது போன்றோ கண்டால் பாவம் செய்வான்.

594. குதிரை வானத்திற்கும் பூமிக்கும் இடையே பறப்பது போல் அல்லது இரண்டு இறக்கைகள் இருந்தது போல் பார்த்தால் உலகிலும், மறுமையிலும் சிறப்பைப் பெற்றுக் கொள்வார். பயணம் போகவும் நேரிடும்.

595. குதிரை கறுப்பாக இருப்பது போல் பார்ப்பின் பொருளையும், மகிழ்ச்சியையும் பெற்றுக்` கொள்வார்.

596. சிவப்புக் குதிரையைப் பார்ப்பின் தீனில் வலிமையையும், நல் இணக்கத்தையும் பெற்றுக் கொள்வார்.

597. குதிரை வெள்ளையும், கறுப்பும் கலந்த நிறமுடையதாகப் பார்த்தால் பூமியில் பொருத்தத் கேடானதை அடையப் பெறுவார்.

598. குதிரையைத் தமக்குரியதாக ஆக்கிக் கொள்வதாகவோ அல்லது அதில் ஏறவோ கண்டால் சிறப்பான, பரக்கத்தான பெண்ணை அடைய நேரிடும்.

599. கறுப்பான பெண் குதிரையைக் கண்டால் செல்வமுள்ள பெண்ணைக் குறிக்கும்.

## கழுதை

600. கழுதையைப் பார்த்தால் பயணம் போவார்; நற்பெயர் கிட்டும். செல்வம் கிடைப்பதற்குரிய அறிகுறி.

601. கோவேறு கழுதையில் ஏறப் பார்த்தால் அவன் வழக்காளியாகவோ, வீடு வாசல் இல்லாதவனாகவோ, அடிமையாகவோ, இடையனாகவோ இருந்தால் இவன் அத்தகையோரை அடக்கி ஆள்வான். இக்கனவை ஒரு பெண்

கண்டாளாயின் மேற் கூறப் பட்டவனை மணம் செய்ய நேரிடும்.

602. கோவேறு கழுதைப் பெண் கழுதையாக இருந்து அதற்கு கடிவாளம் இடப்பட்டி ருப்பதாக பார்ப்பின் — திருமணம் முடிப்பார். சில பொழுது அவருக்குத் தலை மையும், புகழும் கிடைக்கப் பெறும்.

603. பாலைக் குடிக்கப் பார்ப்பின் — குடித்த அளவின்படி நலவைப் பெற்றுக் கொள்வார். வருத் தமும் உண்டாகும்.

604. கழுதையின் மீது ஏறுவது போல் பார்த்தால் — நலவின் பால் சேர்க்கும். பழங்கள், உணவு வகைகளை சேகரம் செய்வார்.

605. கழுதை கறுத்த நிறமாக இருந்தால் — பொருளையும், ஆட்சியையும் பெற்றுக் கொள்வார்.

606. கழுதை மீது ஏறி விழப் பார்ப்பின் — தாமிருக்கும் நிலையிலிருந்துத் தாழ்ந்து விடுவார். சிலபொழுது மரணமாகவும் நேரிடும்.

607. கழுதையைப் பார்வைக் குறைவானதாகவோ அல்லது ஒன்றரைக் கண்ணுடையதாகப் பார்ப்பின் — வாழ்க்கையில் கெடுதல் உண்டாகும்.

608. தன்னுடைய கழுதை பொதி சுமக்க இயலாமலோ, நடக்க இயலாமலோ இருப் பதாகக் கண்டால் — தன் முயற்சியில் சோர்ந்து போவான். உலக வாழ்க்கையில் சீதேவித்தனம் குறைந்துவிடும்.

609. கழுதைக் கறியைத் தின்ன அல்லது வாங்குவது போல் அல்லது அறுப்பது போல் பார்த்தால் — கெட்ட பொருளை அடையப் பெறுவான்; பொருள் தேட அலைய நேரிடும்.

610. பெண் கழுதையின் பாலைக் குடிக்கக் கண்டால் — கடுமையான நோயில் வீழ்வான். பிறகு நோயிலிருந்து குணம் பெறுவான்.

| கனவு | பலன் |
|---|---|
| 611. கோவேறு கழுதையின் கறியை, தோலைப் பார்ப்பின் | பொருள் கிடைக்கும். |

## 23. மாட்டைக் காண்பதன் பலன்

| கனவு | பலன் |
|---|---|
| 612. மாட்டைப் பார்த்தால் | மாட்டைப் பார்ப்பது சிறப்பாகும். சில சமயம் அது பெண்ணையும் குறிக்கும். |
| 613. கறுத்த மாட்டைப் பார்ப்பின் | அந்த ஆண்டு முழுவதும் செழிப்புடன் இருக்கும். |
| 614. கொழுத்த மாட்டை தமக்குரியதாக ஆக்கிக் கொண்டதாகப் பார்ப்பின் | அந்த ஆண்டு செழிப்பான தாகயிருக்கும். அல்லது அவர் இருக்கும் பகுதியிலுள்ளவர்க ளுக்குச் செழிப்பு உண்டாகும். |
| 615. மாட்டுக் கறியைக் கண்டால் | அவ்வாண்டு பொருள் கிட்டும். அவ்வாறே அதன் தோலைக் கண்டாலும் பொருள் கிட்டும். |
| 616. மாட்டு நெய், பால் இவற்றைப் பெற்றுக் கொள் வதாக பார்ப்பின் | பொருள் கிடைக்கும். செழிப்பும் வாழ்வும் உண்டாகும். |
| 617. மாட்டின் பாலைக் கறந்து குடிப்பது போல் பார்த்தால் | அவன் பக்கீராக, மிஸ்கீனாக அல்லது கடனாளியாக, தரித்திரம் பிடித்தவனாயிருப்பின் நல் வாழ்வு பெறுவான். சீமான் தனம் கொண்டவனாக இருப்பின் செல்வம் அதிக ரிக்கும். அடிமையாக இருப்பின் விடுதலை பெறுவான். திருமணம் செய்து கொள்வான். |
| 618. சினை மாட்டைப் பார்த்தால் | அந்த ஆண்டும் நலவால் செழிப்பு பெறும். |

| | |
|---|---|
| 619. பசும்பாலைப் பார்த்தால் | ஹலாலான முதல் கிடைக்கும். |
| 620. அதன் சப்தத்தைக் கேட்டால் | ஒழுக்கமானவர்களைச் சந்திக்க நேரிடும். |
| 621. பசு கடிப்பது போல் பார்த்தால் | கண்டவருக்கு நோய் உண்டாகும். |
| 622. பசு மாடோ, காளை மாடோ இவர்மீது பாயும் போது இவர் அவற்றை விட்டும் தப்பிக்க இயலாமல் அகப்பட்டுக் கொள்வதாகப் பார்த்தால் | அந்த ஆண்டிலேயே இறந்து போவார். |
| 623. அந்நியனுடைய மாட்டைத் திருடுவதாகப் பார்த்தால் | இவர் அவரின் மனைவியை மோசம் செய்வார். |
| 624. காளை மாட்டைப் பார்த்தால் | அரசனின் பணியாள் மூலம் ஓர் அதிகாரியைச் சந்திக்க நேரிடும். |
| 625. காளை மாட்டின் மீது ஏறுவதாகவோ, அதைத் தமக்கு உரிமையாக்கிக் கொண்டதாகவோ பார்த்தால் | அரசனிடம் வேலை கிடைக்கும். அதில் நன்மைகளும் கிடைக்கப் பெறுவார். |
| 626. காளை மாடு தம் வீட்டிற்குள் நுழைந்து அதனை கட்டிப் போடப் பார்த்தால் | தம் பொருளைப் பாதுகாத்துக் கொள்வார். இவருக்கு நன்மைகள் அதிகமாகும். |
| 627. காளை மாடு முட்டியதாகக் கண்டால் | வேலை போய்விடும். அது முட்டிய அளவின்படி வாழ்க்கையில் தொல்லைகள் இருக்கும். |
| 628. ஒரு பெண் காளை மாட்டில் ஏறுவது போல் கண்டால் | திருமணம் ஆகாதவளாக இருப்பின் திருமணம் நடக்கும். கணவன் அன்புடன் நடப்பான். அவள் நல்ல நிலையை எய்தப் பெறுவாள். |

*கனவின் விளக்கம்*

| | |
|---|---|
| 629. காளை மாட்டின் கறியைக் கண்டால் | வேலைக்காரனுக்குப் பொருள் கிடைக்கும். |
| 630. காளையை அறுத்து கறியைப் பங்கிடுவதாகக் கண்டால் | கண்டவன் மரணமாவான். |
| 631. காளைமாடு ஏரில் பூட்டப்பட்டு உழுவதாகப் பார்த்தால் | அவர் அவ்விடத்தில் இறந்து அவரின் சொத்துப் பிரிக்கப்படும். |
| 632. காளை மாட்டின் கன்றை, காளை மாட்டை அறுக்கக் கண்டால் | இவர் ஒருவரை ஆதிக்கம் செய்து, அவரின் சொத்தை அநியாயமாகத் தின்று விடுவார். |

## 24, ஆட்டைக் கனவில் காண்பதன் பலன்கள்

| கனவு | பலன் |
|---|---|
| 633. ஆட்டைக் கண்டால் | அரசரின் ஊழியர்களில் மிகச் சிறந்தவராயும், மக்களில் சிறப்புடையவராயும், வாழ்வுடையவராயும், அதிக ஆற்றலும், வீரமும் கொண்டவராயும் இருப்பார். |
| 634. ஆட்டைப் பிடித்திருப்பது போன்றோ, தமக்கு உரிமையானதாக ஆக்கிக் கொள்வது போன்றோ பார்த்தால் | அதிகாரத்தையும், செல்வத்தையும் பெற்று, மக்களை அடக்கியாள்வார். |
| 635. ஆட்டையறுக்கவோ, கொல்வது போன்றோ பார்த்தால் | மாபெரும் சக்திகொண்ட மனிதரை வெல்வார். |
| 636. ஆட்டை அறுக்கப் பார்த்தால் | தம் சொத்தைப் பிரிப்பார். |
| 637. அதன் கறியைத் தின்றால் | தன் சொத்தைத் தின்று தீர்த்துவிடுவான். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 638. ஆட்டின் மீது ஏறி தாம் விரும்பிய இடத்தில் திருப்புவது போல் பார்த்தால் | அதன்மூலம் நலவைப் பெற்றுக் கொள்வார். |
| 639. ஆட்டை முதுகில் சுமக்கக் கண்டால் | இன்னொருவரின் செலவினங்களை இவர் ஏற்க நேரிடும். |
| 640. தம் மீது ஆடு ஏறுவதாகப் பார்த்தால் | இவரை இன்னொருவர் ஆதிக்கம் செய்வார். |
| 641. ஓர் ஆட்டுக் குட்டியை தமக்குரியதாக்கிக் கொள்ளப் பார்த்தால் | சிறந்த மக்களுக்கு மன்னர் ஆவார். இவ்வாறே அதனை மேய்க்கக் கண்டாலும். |
| 642. 'உளுஹிய்யா'க் கொடுக்க ஆட்டை அறுக்கக் கண்டால் அல்லது ஆடு அல்லாததை 'உளுஹிய்யா' வுக்காக அறுக்கக் கண்டால் | அடிமைத் தனம் நீங்கி விடும். சிறையில் இருப்பவர் விடுதலைப் பெறுவார். நோயாளியாகயிருந்தால் நலம் பெறுவார். கடனாளியாக இருப்பின் கடன் அடைபடும். முதுமையில் நல்வாழ்வு கிட்டும். |
| 643. ஒருவர் வெள்ளாட்டைப் பெற்றிட அல்லது தமக்குரியதாக்கிக் கொள்வது போல் பார்த்தால் | சிறந்த நற்பெயர் கொண்ட ஒரு பெண்ணைப் பெற்றுக் கொள்வார். |
| 644. அதன் கறியை உண்ண அறுப்பதாகப் பார்த்தால் | அதனால் நலவை அடையப் பெறுவார். |
| 645. கறியை உண்ண விருப்பம் கொள்ளாதிருப்பது போல் பார்த்தால் | ஒரு பெண்ணை மணப்பார். |
| 646. அது தம் வீட்டிலிருந்து வெளியேறுவதாகவோ, திருடுப் போய் விட்டதாகவோ, அதில் குறை ஏற்பட்டு விட்டதாகவோ பார்த்தால் | அதன் மூலம் அவருக்குத் தீங்கு ஏற்படும். |

| | |
|---|---|
| 647. அதன் முடிகள், கொழுப்பு, கறி, பால் யாவற்றையும் பெற்றுக்கொள்வது போல் பார்த்தால். | பார்த்தவனுக்கு செல்வமும், வாழ்வும் கிடைக்கும். |
| 648. ஆட்டுக் குட்டி இவருக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப் பார்த்தால் | அவருக்கு குழந்தைப் பிறக்கும். |
| 649. அதன் கறியைத் தின்ன விரும்பாதது போல் பார்த்தால் | அவரின் குழந்தையோ, அவரைச் சார்ந்தவர்களோ இறக்க நேரிடும். |
| 650. அதன் கறியைத் தின்னப் பார்த்தால் | அவனின் குழந்தையின் பொருட்டால் செல்வத்தைப் பெற்றுக்கொள்வான் |
| 651. சமைத்த கறியைத் தின்னப் பார்த்தால் | 'ரிஸ்க்' கையும், வாழ்க்கையில் செழிப்பையும் அடையப் பெறுவார். |
| 652. பச்சையான மாமிசத்தைத் தின்பது போன்றோ அல்லது அந்த மாமிசத்தால் ஒருவனை அடிப்பது போன்றோ பார்த்தால் | இவன் பிற மனிதர்களைப் புறம் பேச நேரிடும். நாவால் தொல்லை கொடுப்பான். |
| 653. சுட்ட மாமிசத்தைத் தின்னக் கண்டால் | துன்பத்துடனும், கவலையுடனும் உணவை அடையப் பெறுவான். |
| 654. முன்பின் அறிமுகமில்லாத கசாப்புக்காரர் ஒருவரைக் கண்டால் | இஸ்ராயீல் (அலை) அவர்களைக் காண நேரிடும். |
| 655. கசாப்புகாரனிடம் கறி வாங்கி வீட்டிற்குக் கொண்டு வருவது போல் கண்டால் | எந்த உறுப்பை வாங்கி வந்தானோ அவனுக்கு முஸீபத்துப் பிடிக்கும். அதன் விலையைக் கொடுத்திருந்தால் |

முஸீபத்திலிருந்து காக்கப் பெறுவான். விலையைக் கொடுக்காதவரை முஸீபத்தினால் பீடிக்கப்படுவான்.

**656.** ஆட்டின் ஈரல், மாங்காய், கொழுப்பு, தாமரைக்காய் இவற்றில் எதுவொன்றைத் தின்னக் கண்டால் அல்லது தமக்குரியதாகக் கண்டால்

இவை யாவும் செல்வத்தைக் குறிக்கும். அவர் செல்வத்தை அடையப் பெறுவார். மேற்கூறப்பட்டன சமைக்கப்பட்டவையாகவோ, பொறிக்கப்பட்டவையாகவோ கண்டிடினும் சரியே! இவை போன்றே ஆடு அல்லாத மற்ற விலங்குகளின் உறுப்பைக் கண்டாலும் மனித உறுப்புக்களின் சிறப்பினைக் குறிப்பனவாகும்.

**657.** ஆடு அல்லாத மற்ற விலங்குகளின் தலையைத் தின்னப் பார்த்தால்

இவரின் வாழ்நாட்கள் நீண்டதாகயிருப்பதைக் குறிக்கும். செல்வம் கிடைப்பதையும், மிகுந்த நலவின் பேரிலும் அறிவிப்பதாகும்.

## மான்

**658.** மானை வேட்டையாடிப் பிடிக்கப் பார்த்தால்

உலக இன்பங்களைப் பெறுவார்.

**659.** மானை எடுத்துக் கொள்வதாகக் கண்டால்

சொத்துரிமையையும், அதிகமான நலவையும் பெற்றுக் கொள்வார்; மானைத் துரத்தக் கண்டால் சக்தியுண்டாகும்.

**660.** விலங்குகளை வேட்டையாடக் கண்டால்

பொருளையும், பெரும் வாழ்வையும் அடையப் பெறுவார். இதில் ஆண் மிருகம், பெண் மிருகம் என்ற வித்தியாசமில்லை.

**661.** மானை வேட்டையாடப் பார்த்தால்

அழகான பெண்ணை மணம் செய்து கொள்வார்.

662. மானை அறுக்கப் பார்த்தால்

கன்னிப் பெண்ணைக் கற்பழிப்பான்.

### *காட்டு மாடு*

663. காட்டு மாட்டைக் கண்டால்

அது பெண்ணைக் குறிக்கும்.

664. ஒரு மானை, மாட்டை வேட்டையாடக் கண்டால்

ஒரு பெண்ணின் மூலம் செல்வத்தைப் பெற்றுக் கொள்வார்.

### *முதலை*

665. முதலையைப் பார்த்தால்

பெண்ணைச் சந்திப்பார். அதனால் ஒரு தங்கடமும் ஏற்படாது; நன்மையும் கிடைக்காது.

### *முயல்*

666. முயலைக் கனவில் கண்டால்

அது அழகான பெண்ணைக் குறிக்கும்.

667. முயலை அறுக்கப் பார்த்தால்

நிலையில்லாத பெண்ணைக் குறிக்கும்.

668. கறியைச் சமைத்து உண்ணக் கண்டால்

அவர் அறியாப் புறத்தில் இருந்து இரணம் கிடைக்கும்.

669. முயலை வேட்டையாட, அன்பளிப்பாகப் பெறுவது போல், விலைக்கு வாங்குவதாகப் பார்த்தால்

ரிஸ்க்கு கிடைக்கும். திருமணம் ஆகாதவராக இருந்தால் திருமணம் நடக்கும். அல்லது குழந்தைப் பிறக்கும்.

### *நாய்*

670. நாயுடன் பிணங்கிக் கொள்வதாகப் பார்த்தால்

தம் உறவினர்களுடன் பிணங்கிக் கொள்வார்.

671. காவல் நாயைக் கண்டால்

மனைவியை தம் பொருளைப் பாதுகாப்பார்.

672. தாம் ஒரு நாயாக ஆகிவிட்டது போல் பார்த்தால்

இல்மு கிடைக்கப் பெறுவார். நாயைப் பார்ப்பது சில பொழுது

உலகில் முகங்குப்புற விழுந்து கிடப்பதைக் குறிப்பதும் உண்டு. அல்லது பகைவன் நண்பனாவதையும் குறிக்கும். அவன் தாழ்ந்தவனாயும், ரோஷம் அற்றவனாயும் இருப்பான்.

673. தன்னை நோக்கி நாய் ஊளையிடுவது போல் கண்டால்

ரோஷமற்ற மனிதனிடம் தீய பேச்சை ஏற்க வேண்டிய நிலை ஏற்படும்.

674. தன்னை நாய் கடித்து ஆடையைக் கிழிக்கப் பார்த்தால்

இவன் அவமானப்பட்ட அளவின்படி இழிவடைவான்.

675. நாய் கறி தின்னக் கண்டால்

பகைவரை வென்று அவரின் பொருளை அடைந்து கொள்வார்.

676. பெண் நாயின் பாலைக் குடிக்கக் கண்டால்

கடும் பயங்கரம் ஏற்படும். வீரப் பற்கள் கொண்ட விலங்குகளைக் காண்பது, அவற்றின் வலிமையின் அளவிற்குப் பகைவர்கள் உண்டாவதைக் குறிக்கும்.

## குரங்கு

677. குரங்கைப் பார்த்தால்

இவனால் வெற்றிக் கொள்ளப்படும் பகைவனைக் குறிக்கும். இவன் செய்த பாவச் செயல்களாலும், கெடுதிகளினாலும் அல்லாஹ் இவனுக்குக் கொடுத்த அருட் கொடைகள் நீக்கப்பட்டுவிடும்.

678. குரங்குடன் சண்டையிட்டு அதை வெல்வது போல் பார்த்தால்

நோயில் விழுவான். குரங்கு இவனை வெல்வதாகப் பார்த்தால் இவனுக்கு ஏற்பட்ட நோய் தீராது.

## முள்ளம்பன்றி

| | |
|---|---|
| 679. முள்ளம் பன்றியைப் பார்த்தால் | கெட்ட பெண் பிள்ளையைக் குறிக்கும். |
| 680. அதன் பாலைக் குடிக்கப் பார்த்தால் | ஒரு பெண் இவனை மோசம் செய்து விடுவாள். |
| 681. ஆண் முள்ளம் பன்றியைக் கண்டால் | மோசம் செய்யப்பட்ட, சாபத்திற்கு ஆளான பகைவனைக் குறிக்கும். |
| 682. ஓநாயைப் பார்த்தால் | அநியாயக்கார அரசனையோ, விரோதமான, அநியாயக் காரரான, பொய்யனான கள்ளனைக் குறிக்கும். |
| 683. இதன் பாலைக் குடிக்கப் பார்த்தால் | மிகுதியான நன்மைகளைப் பெற்றுக் கொள்வார். கவலைக் கொண்டவராயிருந்தால் அல்லாஹ் அவரின் கவலை களை நீக்குவான். வறுமையான ராகயிருப்பின் செல்வத்தைப் பெறுவார். |
| 684. ஒருவர் தம் வீட்டிலோ, அடுத்தவர் வீட்டிலோ பூனை நுழையக் கண்டால் | கள்ளன் நுழைவான். |
| 685. பூனை ஒரு பொருளை எடுத்துச் செல்வதாகப் பார்த்தால் | இவர் வீட்டில் சில பொருள் கள் களவு போகும். |
| 686, பூனையுடன் விளையாடப் பார்த்தால் | விரைவில் நோயுண்டாகும். |
| 687. பூனையை மிகைப்பது போல் கண்டால் | விரைவில் நோய் நலமாகும். |

| | |
|---|---|
| | நோய் கடுமையாகும். நீண்ட நாட்கள் நோயில் வீழ்வார். இமாம் இப்னு சிரீன் (ரஹ்) அவர்கள் ஓராண்டு வரை நோயுற்றிருப்பார் எனக் கூறுகின்றார்கள். |
| 688. இவரைப் பூனைக் கடிக்கக் கண்டால் | |
| **பாம்பு** | |
| 689. பாம்பைப் பார்த்தால் | மறைவான பகைவனைக் குறிக்கும். |
| 690. பாம்புடன் சண்டை இடக் கண்டால் | பகைவனுடன் போராடுவார். |
| 691. பாம்பை வென்றிடப் பார்த்தால் | பகைவனை வெல்வார். |
| 692. பாம்புத் தம்மை வெல்லப் பார்த்தால் | இவரைப் பகைவர் வென்றிடுவர். |
| 693. பாம்பு கொத்தக் கண்டால் | பகைவனால் கெடுதி யுண்டாகும். |
| 694. பாம்பைக் கொல்வது போல் பார்த்தால் | பகைவன் ஒழிவான். |
| 695. பாம்பு தம் வீட்டில் புகக் கண்டாலோ, அது தம் வீட்டில் இருக்கக் கண்டாலோ | பெண் பிள்ளைகள் அல்லது இவரின் குடும்பத்தார் மூலம் பகையுண்டாகும். |
| 696. பாம்பு தம் வீட்டை விட்டும் வெளியேறப் பார்த்தால் | அது தொலைவிலுள்ள பகைவனைக் குறிக்கும். |
| 697. தம் பின்துவாரம், காது, வயிற்றிலிருந்து பாம்பு வெளியாகப் பார்த்தால் | தம் குடும்பத்தில் பகைவர் உண்டாவார். |
| **நட்டுவாக்காளி** | |
| 698. தம்மை நட்டுவாக்காளி கொட்டுவதாகக் கண்டால் | இவரின் பகைவர் இவரைப் புறம் பேசுவர். |
| 699. நட்டுவாக்காளியைக் கொல்லப் பார்த்தால் | பகைவரை வெல்வார். |

## கனவின் விளக்கம்

700. நட்டுவாக்காளியைக் கையில் பிடித்து மனிதர்களைக் கொட்டவிடக் கண்டால் — இவர் பிற மனிதர்களைப் புறம் பேசுவார்.

701. அதன் கறியை உண்ணக் கண்டால் — பகைவர் மூலம் பொருள் பெறுவார்.

702. தம் வீட்டில், தம் வயிற்றில் அல்லது விரிப்பில், சட்டையில், தம் உடையில் நட்டுவாக்காளி புகுவதாகப் பார்த்தால் — இவரைப் பற்றி பிறரிடம் பித்னாக்கள் செய்யும் பகைவனைக் குறிக்கும். இதன் பலன் பாம்பின் பலனைப் போன்றாகும்.

### குளவி ஈ

703. குளவிஈ போன்றவைத் தம் மீது விழக் கண்டால் — சிறுவர்களிடம் பேச்சு வாங்க நேரிடும்.

### எறும்பு

704. எறும்பைக் கண்டால் — எறும்பைக் காண்பது மிகுந்த பரக்கத்தைக் குறிக்கும். அவரைச் சார்ந்தவர்களுக்கு மிகவும் நன்மை செய்வார்.

### மூட்டைப் பூச்சி

705. மூட்டைப் பூச்சியைத் தம் வீட்டில், தம்முடைய பகுதியில் அல்லது ஓரிடத்தில் பார்த்தால் — அந்த இடத்தைச் சார்ந்தவர்களின் குலம்கோத்திரம் பிள்ளைகள் அதிகமாவார்கள்.

706. தம் மஹல்லாவிலிருந்து மூட்டைப் பூச்சி வெளியேறி விடப் பார்த்தால் — அந்த மஹல்லாவிலுள்ளவர்கள் அதை விட்டும் மரணத்தைக் கொண்டோ, திரும்புவதைக் கொண்டோ புறப்பட நேரிடும்.

### எலி

707. எலியைக் கண்டால் — கெட்ட குணமுள்ள குழப்பம் செய்யும் பெண்ணைக் குறிக்கும்.

708. அதை ஒருவர் பிடிக்கக் கண்டால் — மேற்கூறிய பெண்ணைப் போன்றே பலன் ஏற்படும்.

பொருளடக்கம்



## 25. பறவைகளைக் கனவில் பார்ப்பதன் விளக்கம்

| கனவு | பலன் |
|---|---|
| **கழுகு** | |
| 709. தமக்குக் கழுகு வழிப்பட்டதாகக் கண்டால் | செல்வத்தையும், அதிகாரத்தையும், தலைமையையும் பெற்றுக் கொள்வார். |
| 710. கழுகு தம்மைச் சுமந்து வானில் பறப்பது போல் பார்த்தால் | ஆட்சி பீடம் ஏறி அதன்மூலம் சிறப்பையும், உயர்வையும் அடையப் பெறுவார். |
| 711. தாம் வானத்தில் பறப்பதாகக் கண்டால் | பயணம் சென்று அங்கு இறந்து போவார். |
| **காகம்** | |
| 712. காகத்தைப் பார்த்தால் | தீனில்லாத, பொய்யனான பாவியைக் குறிக்கும். |
| **கொக்கு** | |
| 713. கொக்கைப் பார்த்தால் | ஊர் சுற்றும் ஏழை மனிதனைக் குறிக்கும். |
| **தீக்கோழி** | |
| 714. தீக்கோழியைப் பார்த்தால் | பரதேசியான நாட்டுப் புறத்தானைக் குறிக்கும். |
| **சேவல்** | |
| 715. சேவலைக் கண்டால் | அரபியல்லாத மனிதனைக் குறிக்கும். அல்லது அடிமையைக் குறிக்கும். இன்னொரு சொல்படி முஅத்தினைக் குறிக்கும். மக்கள் இவனின் அழைப்பை எப்பொழுதும் கேட்டுக் கொண்டே இருப்பார்கள். |

### கோழி

716. கோழியைக் கண்டால் — பரக்கத்தான பெண் பிள்ளையைக் குறிக்கும்.

717. மிருதமான கோழியைப் பார்த்தால் — திருமணத்திற்காக, மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியில் ஒன்றுகூடும் அடிமைப் பெண்களைக் குறிக்கும்.

### பெண் கவ்தாரி

718. பெண் கவ்தாரியைப் பார்த்தால் — மோசம் செய்திடும், நலமற்ற, உறுதியற்ற பெண்ணைக் குறிக்கும்.

### கிளி

719. கிளியைப் பார்த்தால் — அடிமைப் பெண்ணையோ, எதீமான பிள்ளையையோ குறிக்கும்.

### ஆண் மயில்

720. ஆண் மயிலைக் கண்டால் — அரபியல்லாத மனிதனைக் குறிக்கும். அல்லது செல்வத்தைக் குறிக்கும்.

### மாடப் புறா

721. மாடப் புறாவைக் கண்டால் — அது பெண்ணாகும். சிலசமயம் மனைவி, அல்லது மகளைக் குறிக்கும். புறாக்களை அதிகமாகக் கண்டால், பெண் பிள்ளைகளைக் குறிக்கும்.

### காட்டுப் புறா

722. காட்டுப் புறாவைப் பார்த்தால் — மகிழ்ச்சியூட்டும் விளையாட்டுப் பெண்ணைக் குறிக்கும்.

### மயில்

723. பெண் மயிலைப் பார்த்தால் — அரபியல்லாத அழகிய பெண்ணாவாள்.

724. மயில் அழகற்றதாகப் பார்த்தால் — பரக்கத்தில்லாத பெண் பிள்ளையாவாள்.

**கானாங்கோழி**

725. கானாங் கோழியைப் பார்த்தால் — பரக்கத்தான பிள்ளையாகும்.

**தவிட்டுப் புறா**

726. தவிட்டுப் புறாவைப் பார்த்தால் — மார்க்கமற்ற வெட்கமற்ற பெண் பிள்ளையைக் குறிக்கும். இப்பறவைகளின் பலன்கள் அனைத்தும் ஒரே மாதிரியானவைகளே!

**குருவிகள்**

727. குருவிகளின் சப்தங்களைக் கேட்டால் — அவருக்கு நற்செய்திகள் வரும்.

**வவ்வால்**

728. வவ்வாலைக் கண்டால் — வணக்கவாளியான சிறந்த மனிதரை, நலவுகள், பரக்கத்துகள் உடைய மனிதரைக் குறிக்கும்.

**சிட்டுக் குருவி**

729. சிட்டுக் குருவியைக் கண்டால் — அதிகப் பயணம் செய்வார். பயணத்தில் நற்காரியங்களைப் பெற்றுக் கொள்வார்.

**சாக்குருவி**

730. சாக்குருவியைக் கண்டால் — ஆதம் (அலை) அவர்களின்மீது அறிவிக்கும். கண்டவருக்கு நேர்வழி கிடைக்கும்.

**தண்ணீர்ப் பறவை**

731. நீர்ப் பறவைகளைப் பார்த்தால் — அரசரின் அழைப்பு வரும். பணிவிடைக்காரனையும் குறிக்கும்.

732. இவற்றைக் கரையில் கண்டால் — கைரும் செழிப்பும் ஏற்படும். அதனைக் கண்டால் ரிஸ்க்கில் நலவில்லை; கைசேதங்கள் ஏற்படும்.

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 733. அறியாத பறவைகளைக் கண்டால் | மலக்குகள் ஆவார்கள். |
| **முட்டை** | |
| 734. தமக்குத் தெரியாத ஒரு வகை முட்டையைக் கண்டால், அது அவரிடம் வரக் கண்டால் | அது அழகான பெண்ணைக் குறிக்கும். |
| 735. அவிக்கப்பட்டு, பொரிக் கப்பட்டு அதனைத் தின்னப் பார்த்தால் | பொருளும், நல்ல உணவுமாகும். |
| 736. பச்சையாகத் தின்னப் பார்த்தால் | ஹராமான பணத்தைப் பெற்றுக் கொள்ள நேரிடும். |
| 737. அதன் மேல் தோலை (ஓடு), வெள்ளைக் கருவை உண்ணப் பார்த்தால் | வெட்டப்பட்டவனின், இறந்து விட்டவனின் பொருளைத் தின்பான். சில சமயம், கப்ருகளைத் தோண்டுவான். வல்லாஹு அஃலம். |

ஹிகாயத், இமாம் முஹம்மது சீரீன் (ரஹ்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, ''நான் மதீனாவிலுள்ள பள்ளிவாசலின் மினாராவில் வெண்மையான ஒரு புறா இருப்பதாயும், அப்புறாவை 'வல்வத்தான்' என்னும் பறவை அறைந்து எடுத்துக் கொண்டு செல்வதாகவும் கனவு கண்டேன்'' எனக் கூறியபொழுது,

இமாம் அவர்கள் கூறினார்கள், ''நீர் கண்ட கனவு உண்மையாயின் ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுஃப், அப்துல்லாஹ் இப்னு ஜஃபருத் தய்யார் என்பவரின் மகளைத் திருமணம் செய்வார்'' என்று கூறினார்கள்.

சில நாட்களுக்குப் பின்னர் அவ்வாறே ஹஜ்ஜாஜ் மணம் செய்தார். அப்பொழுது இமாமிடம் கேட்கப்பட்டது. ''தாங்கள் எவ்வாறு இதை அறிந்தீர்கள் ?'' என்று. அப்பொழுது கூறினார்கள்:

''புறா என்பது பெண்ணாகும். அதன் அழகு என்பது வெண்மையைக் குறிக்கும். பள்ளிவாசலுக்கு அழகாகிறது 'மினாரா'வாகும். எனவே, மதீனாவில் இப்பெண்ணை விட அழகானவளையும், குலத்தில் சிறப்புற்றவளையும் காணப்படவில்லை.

"வல்வத்தானை'க் கண்டேன்" என்றார் அவர். அது அரசனைக் குறிக்கிறது. அது மிகுந்த அநீதமுடைய பறவையாகும். எனவே, அரசர்களில் ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுஃபை விட அநீதி இழைப்பவனை நான் காணவில்லை. அதனால் தான் இந்த பலனைக் கூறினேன்" என்றார்கள்.

இதனைக் கேட்டு அவர்களின் மஜ்லிஸில் இருந்து செவியேற்றவர்கள் அனைவரும் வியப்படைந்தார்கள்.

ஹிகாயத் : முஹம்மதுப்னு ஸீரீன் (ரஹ்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "நான் ஒரு கொழுத்த பறவை வானத்திலிருந்து இறங்கி ஒரு மரத்தில் ஏறி அதன் மலர்களைத் தின்றுவிட்டு பறந்திடக் கண்டேன்" எனக் கூறியபொழுது, இதைக் கேட்ட இமாம் அவர்களின் முகம் மாறுதல் அடைந்தது. "இக்கனவு உலமாக்கள் மரணமாவதைக் குறிக்கும்" என்றனர். அந்த ஆண்டு ஹஸனுல் பஸரீ (ரஹ்), இப்னு சிரீன் (ரஹ்) இறந்தனர்.

ஹிகாயத்: உமர் (ரலி) அவர்கள் தாம் கண்ட கனவில், "ஒரு சேவல் என்னை இரண்டு முறைக் கொத்தியதாகக் கண்டேன்" என்றார்கள். அவர்களிடம், 'அதன் விளக்கம் என்ன?' என்று வினவப்பட்டபொழுது, 'என்னை ஒருவன் வெட்டுவான்' என்றனர். அவ்வாறே நான்கு நாட்களில் 'அபுலுஃலுக்' என்னும் 'மல்ஊன்' உமர் (ரலி) அவர்களை வெட்டி விட்டான்.

ஹிகாயத்: ஒரு மனிதர் இமாம் இப்னு ஸீரீன் (ரஹ்) அவர்களிடம் வந்து, "ஒரு மனிதர் தாம் கண்ட கனவில் முட்டையை உடைத்து, அதனுள் இருக்கும் வெள்ளைக் கருவை எடுத்துக் கொண்டு மஞ்சள் கருவைத் தூக்கி எறிந்தது போல் கண்டார்; அதன் விளக்கம் யாது?'' என்று வினவியபொழுது,

இமாம் அந்த மனிதரிடம் 'கனவு கண்டவரை என்னிடம் வரச் சொல்லும்' என்றார்கள். அந்த மனிதர் 'தாங்கள் என்னிடம் விளக்கத்தைக் கூறினால் நான் அவரிடம் சொல்லி விடுகிறேன்" எனக் கூறியபொழுது,

## கனவின் விளக்கம்

"அவர்தான் இங்கு வந்து விளக்கம் கேட்க வேண்டும்" என்றார்கள். 'நான்தான் அக்கனவைக் கண்டேன்' என அம்மனிதர் கூற, 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீர்தான் கண்டீர் என்று சொல்வீரா?' என்றார்கள்.

உடனே அந்த மனிதர் சத்தியம் செய்து 'நான்தான் கண்டேன்' என்றதும், இமாம் அவர்கள் தம்மைச் சுற்றியிருந்தவர்களிடம் "இவர் இறந்தவர்களின் கஃபன் துணிகளை கப்ருகளைத் தோண்டி எடுப்பவர் ஆவார்; இவரை அரசரிடம் பிடித்துச் செல்லுங்கள்" என்றார்கள்.

உடனே அந்த மனிதர், 'இமாம் அவர்களே! இனி சாகும்வரையும் இத்தகைய செயலைச் செய்யமாட்டேன்' என்று கூறி தவ்பாச் செய்தார்.

ஹிகாயத்: ஒரு மனிதர் இமாம் இப்னு சிரீன் (ரஹ்) அவர்களிடம் வந்து, "சாக்குருவி என்னும் பெயர் கொண்ட ஒரு பறவையைப் பிடித்து அதனை அறுப்பதற்காக அதன் தொண்டையில் மூன்று முறை கத்தியை வைத்தேன்; அது பறந்து விட்டது. நான்காம் முறை அறுப்பது போல் கனவில் கண்டேன்" என்று கூறிய பொழுது,

இமாம் அவர்கள், "நீர் கண்டது நற்கனவேயாகும். நீர் கன்னிப் பெண்ணை மூன்று முறை உடலுறவு கொள்ள முயன்றபொழுது நீர் சக்தி பெறாது போய்விட்டீர்; நான்காம் முறையே சக்தி பெற்றீர்!" என்று கூறினார்கள். அதைக் கேட்ட அம்மனிதர், "நீங்கள் உண்மையே உரைத்தீர்கள்; நான் ஐந்து இரவுகள் இவ்வாறே இருந்தேன்" என்றார். இமாம் சிரித்து கொண்டு, சிறிது நேரம் தலைகுனிந்து இருந்துவிட்டு, "அருகில் வாரும்! இன்னும் உம் கனவின் பலன் ஒன்றிருக்கிறது. நீர் ஜிமாஃ செய்த பொழுது அவள் காற்றுப் பரிந்தாளா?" எனக் கேட்டார்கள். "தாங்கள் உண்மையே கூறினீர்கள்!" என அவர் கூறி வெட்கத்துடன் எழுந்துச் சென்று விட்டார். வல்லாஹு ஸுப்ஹானஹு தஆலா அஃலமு.

## 26. மீன்களைக் காண்பதன் பலன்கள்

| கனவு | பலன் |
|---|---|
| 738. பெரிய மீன்களை மிகுதியாகக் கண்டால் | அவை அனைத்தையுமோ, சிலவற்றையோ கிடைக்கப் பெற்றவருக்கு பெரும் வாழ்வும், பொருள்களும் உண்டாகும். |
| 739. சிறிய மீன்களைப் பார்த்தால் | விசாரமும் கவலையும் ஏற்படும். |
| 740. ஒன்றையோ, இரண்டையோ பார்த்தால் | ஓரிரு பெண்பிள்ளைகளாகும். |
| 741. சமைத்த மீனை, அதன் குழம்பைப் (ஆணம்) பார்த்தால் | அதை உண்டவருக்கு கொள்ளை வாழ்வும், பொருளும் கிடைக்கும். சில சமயம், அரசன் அல்லது ஒரு பெண்ணின் மூலம் பொருள் கிடைக்கும். |
| 742. உப்பு மீன் சிறியதாகவோ, பெரியதாகவோ எவ்வாறிருப்பினும் அதனைப் பார்த்தால் | கண்டவரின் அடிமை, ஊழியன், இவரின் உடன் பிறந்தார் மூலமாகக் கவலையும் விசாரமும் ஏற்படும். |
| **முதலை** | |
| 743. முதலையைக் கண்டால் | குபாடம் செய்யும் பகைவனையும், களவு செய்திடும் திருடனையும் குறிக்கும். அவனை அவனின் தோழன், பகைவன் அச்சம் தீரா திருப்பான். அதன் கறி, தோல், எலும்புகள் யாவும் அவனின் பகைவன் ஆவான். |
| **தவளை** | |
| 744. தவளைகளில் ஒன்றையோ இரண்டையோ பார்த்தால் | பேணுதலான வணக்காவாளியைக் குறிக்கும். |

| | |
|---|---|
| 745. தவளைக் கூட்டத்தை அதிகமாகப் பார்த்தால் | அவை அல்லாஹ்வின் நல்லடியார்களின் கூட்டத்தைக் குறிக்கும். |
| 746. அதை ஒரு வீட்டில், ஓரிடத்தில், ஒரு பூமியில் பார்த்தால் | அல்லாஹ்வின் வேதனை அப்பகுதியைச் சேர்ந்தவர்களுக்கு இறங்குதல் |
| **ஆமை** | |
| 747. ஆமையைப் பார்த்தால் | பேணுதலுள்ள ஆபிதாகிய இல்மும் அமலும் கொண்ட மனிதரைக் குறிக்கும். |
| 748. ஆமையைக் கண்டால், அதைத் தமக்குரியதாக ஆக்கிக் கொண்டதாக, அது தன் இடத்திற்குள் நுழைவதாகக் கண்டால் | ஓர் ஆலிமுடன் பழக்கம் ஏற்பட்டு அன்பு ஏற்பட வாய்ப்பு ஏற்படும். |
| 749. அதன் கறியைத் தின்னக் கண்டால் | அந்த ஆலிமிடம் இல்மைக் கற்க நேரிடும். |
| 750. ஆமை பாதையில், குப்பையில் இருக்கப்பார்த்தால் | அந்தப் பகுதியில் அறியப்படாத இல்முகளைப் பெற்றுக் கொள்ள நேரிடும். |
| 751. ஆமை பாதுகாப்பாக இருப்பதாகக் கண்டால் | அங்குச் சிறப்பான, பாதுகாக்கப் பெற்ற இல்மு கிடைக்கும். |
| **நண்டு** | |
| 752. நண்டைப் பார்த்தால் | கண்ணியமான, நற்குணம் கொண்ட மனிதரைக் குறிக்கும் |

## 27. தொழிலாளிகளைக் காண்பதன் விளக்கம்

| கனவு | பலன் |
|---|---|
| 753. நிறுப்பவன் அளப்பவன் இவ்விருவரையும் கண்டால் | 'காஜி'யைக் குறிக்கும். அவ்விருவரும் அறியப்படாதவர்களாக, அவ்விருவரும் |

| | |
|---|---|
| | கையடித்துச் சத்தியம் செய்வதாகக் காணப்பட்டால் காஜி தம்முடைய தீர்ப்பில் அநீதி செய்வார் என்பதைக் குறிக்கும். |
| 754. ஒருவர் தாம் நிறுப்பவராகவும், அளப்பவராகவும் ஆகிவிட்டதாக பார்த்தால் | அவர் நீதிபதியாகி விட நேரிடும். |
| 755. கதீபைப் பார்த்தால் | தீனில் சட்ட மேதையாவார். |
| 756. வட்டி வாங்குபவனைப் பார்த்தால் | பயனளிக்காத ஆலிமைக் குறிக்கும். உலகத்தில் நன்மைகள் ஏற்படும். |
| 757. துணி வியாபாரியைப் பார்த்தால் | உலகில் கடுமையான சங்கடங்களுக்கு ஆளானவனாயும், புளுகனாகவும், வைத்தியனாகவும் இருப்பான். |
| 758. தையற்காரனைக் கண்டால் | தீனை துன்யாவுக்குப் பகரமாக்கி விடுவான். அவனால் உலகக் காரியங்கள் நிரப்பமாகும். |
| 759. தட்டானைப் பார்த்தால் | மனிதர்களுக்கும், ஆண் பெண் முதலியவர்களுக்கும் இடையே சமாதானம் செய்து வைப்பார். |
| 760. தச்சனைக் கண்டால் | மக்களை அடக்கியாள்வார். |
| 761. வண்ணானைக் கண்டால் | மக்களைப் பாவத்திலிருந்து மீள வைத்து 'தவ்பா'வின் பால் அழைப்பார். |
| 762. சமையல்காரனைப் பார்த்தால் | ரிஸ்க் தேடும் முயற்சியில் பெரும் பேச்சில் ஈடுபடுவார். நலவுகளை அடைந்து கொள்வார். |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 763. பொன், வெள்ளி, செம்பு முதலியவற்றை உருக்கி வார்க்கும் தொழில் செய்பவரைக் கண்டால் | பொய் சொல்லும் மனிதனைக் குறிக்கும். மோசடிக்காரனாயும், தன் தொழிலில் நற்பெயர் கிட்டாதவனாயும் இருப்பான். |
| 764. பஞ்சு அடிப்பவரைப் பார்த்தால் | உண்மை பேசும் மனிதராகவும், நற்செயல்கள் செய்பவராயும், நல்லது கெட்டதுகளைப் பிரித்து அறிவிக்கும் தன்மை கொண்டவராயுமிருப்பார். |
| 765. நாவிதரைப் பார்த்தால் | பொருள் மிகுந்த மனிதரைக் குறிக்கும். மிகுந்த தங்கடமும், நன்மையும் செய்வார். |
| 766. நெசவாளியைக் கண்டால் | பயணம் செய்யும் மனிதனைக் குறிக்கும். |
| 767. கொத்தனாரைக் கண்டால் | அவர் கையில் தவ்பா செய்யும் மனிதரைக் குறிக்கும். |
| 768. குறி சொல்பவர், நட்சத்திரங்களைக் கொண்டு குறி சொல்பவர், செய்வினைச் செய்பவர் இவர்களைப் பார்த்தால் | பொய் சொல்லும் மனிதரைக் குறிக்கும். எனினும், அரசருக்கு நெருக்கமானவராயிருப்பார். |
| 769. ஓதிப் பார்ப்பவர், துஆ எழுதி கட்டுபவர் இத்தகையவர் களைக் கண்டால் | மக்களிடம் இனிமையாகப் பேசி அவர்களை ஏமாற்றுவார். |
| 770. சிப்பாயைக் கண்டால் | அல்லாஹ்வின் மீது பொய் கூறுவான். |

### ஒளி

| | |
|---|---|
| 771. ஒளியைக் கண்டால் | நேர்வழியைக் குறிக்கும். |
| 772. இருளைக் கண்டால் | வழிகேட்டைக் குறிக்கும். |
| 773. பாதையைப் பார்த்தால் | உண்மை வழியை அறிவிக்கும் |

## கனவின் விளக்கம்

| | |
|---|---|
| 774. பாதையை விட்டும் அகலக் கண்டால் | கண்டவர் கெடுதியின் பக்கமும் வழி கேட்டிலும் செல்வார். |
| 775. பாலைவனத்தைப் பார்த்தால் | அது வழிகேட்டைக் குறிக்கும். |
| 776. கோட்டையினுள் நுழைவதாகப் பார்த்தால் | தீனில் பாதுகாப்பைக் குறிக்கும். |
| 777. சுருட்டப்பட்ட கிதாபைக் கண்டால் | இது மறைவான விஷயங்களைக் குறிக்கும். |
| 778. விரிக்கப்பட்ட கிதாபைக் கண்டால் | தெளிவான வெளிப்படையான விஷயங்களைக் குறிக்கும். |
| 779. இல்முகள், பிக்ஹுகள் உடைய கிதாபைப் பார்த்தால் | ஹிக்மத்துகளும், அறிவுகளுமாகும். |
| 780. பாடல்கள் கொண்ட புத்தகத்தைக் கண்டால் | பொய்யும், புரட்டும், வழிகேடுகளும் ஆகும். |
| 781. குர்ஆன் ஏடுகளைப் பார்த்தால் | அறிவு ஞானங்களைப் பெற்றுக்கொள்வார். |
| 782. தம் கையால் குர்ஆனை எழுதக் கண்டால் | தீனையும், பொருளையும் பெறுவதுடன் அவற்றைக் கொண்டு மக்களுக்கும் நன்மை செய்வார். |
| 783. குர்ஆன் ஏடுகளைக் கிழிக்கப் பார்த்தால் | அல்லாஹ்வின் வேதத்தை அலட்சியம் செய்தவர் ஆவார். |
| 784. குர்ஆனின் தாள்களைத் தின்னக் கண்டால் | அல்லாஹ்வின் வேதத்தைப் பரிகாசம் செய்தவன் ஆவான். இறைவனின் கட்டளைகளை இலேசாக எண்ணிப் பரிகாசம் செய்வான். |
| 785. தம் உறுப்பில் சில பாம்பாக மாறி விட்டதாகக் கண்டால் | அவரின் ஆயுள் குறைந்து விடும். |

| | |
|---|---|
| 786. ஒரு பொருளை இரவலாகக் கொடுக்கவோ, வாங்கவோ பார்த்தால் | இவருக்கு எந்தப் பயனுமில்லை. தங்கடத்தையும் நீக்காது. |
| 787. அடிமையை விற்பதாகப் பார்த்தால் | கவலைகள் நீங்கும். |
| 788. அடிமையை வாங்கக் கண்டால் | துக்கம் பீடிக்கும். அடிமைப் பெண்ணை வாங்குவது போல் காண்பது விற்பதைவிடச் சிறந்த பலன் அளிக்கும். |
| 789. கஸ்தூரியைப் பார்த்தால் | மகிழ்ச்சியைக் கொடுக்கும். |
| 790. சந்தன மணத்தைப் பார்ப்பது | மணமான புகழ் கிட்டும். |
| 791. குங்குமத்தைக் கண்டால் | ஒன்று திரட்டப்பட்ட மணமான பொருளாகும். |
| 792. குங்கும சாயத்தைப் பார்த்தால் | நோயை வருத்தும். காவி நிறசாயம் யாவும் இதனையே குறிக்கும். |
| 793. ஹல்வாவைப் பார்ப்பது | இனிப்புப் பொருள்கள் யாவும் மணமான 'ரிஸ்க்'கும் பொருளுமாகும். |
| 794. ஹல்வா செய்யப் பார்த்தால் | மிடுமையை விட்டும் நீங்குவார். |
| 795. இன்னொருவன் ஹல்வா செய்யப் பார்த்தால் | கொள்ளை வாழ்வும், அனந்தரச் சொத்தும், பயன்களும் கிட்டும். |
| 796. திருமணம் செய்யப் பார்த்தால் | நோய்கள் அனைத்தையும் விட்டு நலம் ஏற்படும். |
| 797. மருந்தைக் கட்டாயமாகக் ஈடிக்கப் பார்த்தால் | உடல் நலமும், பரக்கத்தும் கிடைக்கும். |
| 798. அகில் கட்டையைக் கண்டால் | கவலைகள், துன்பங்களை |

| | |
|---|---|
| | விட்டும் நீங்கி விடுவார். வாழ்க்கையில் பெருக்கம் ஏற்படும். |
| 799. மோகம் கொண்ட மனிதனைப் பார்த்தால் | அது மாப்பிள்ளையைக் குறிக்கும். |
| 800. மாப்பிள்ளையைப் பார்த்தால் | மோகங் கொண்டவனைக் குறிக்கும். |
| 801. விளையாடக் கண்டால் | துக்கத்தைக் குறிக்கும். |
| 802. கவலையுடன் இருப்பது போல் கண்டால் | விளையாட்டைக் குறிக்கும். |
| 803. விலங்கு போடக் கண்டால் | நலவைக் குறிக்கும். |
| 804. பள்ளிவாசலில், தொழுகையில் அல்லது பீஸபீலில் விலங்கு மாட்டுவதாகப் பார்த்தால் | இக்கனவு தீனில் நிலைத்து நிற்பதையும், பாவங்களை விட்டு விலகியிருப்பதையும் அறிவிக்கும். |
| 805. ஊரிலோ, மஹல்லாவிலோ தனக்கு விலங்கு மாட்டக் கண்டால் | திருமணம் முடிப்பான். |
| 806. தாயம் விளையாடக் கண்டால் | வழக்கு ஏற்படும். |
| 807. குர்ஆனுடன் பேனாவும் ஒரே இடத்தில் இருக்கப் பார்த்தால் | இல்மும் ஹிக்மத்தும் உண்டாகும். |
| 808. குர்ஆனும், மைக்கூடும் கண்டால் | பிள்ளையைக் குறிக்கும். |